

நடத்திய பரிசோதனைகள் நிரூபிக்கின்றன...
பிஸ்கட் என்றால் இதுதான்—சுவைக்கும்
வைட்டமின்களுக்கும்
போஷாக்குக்கும் இதுதான்:
பிரிட்டானியா
க்ளுக்கோஸ்-D
பிரிட்டானியா க்ளுக்கோஸ்-Dயுடன் மற்றொரு முன்னணி க்ளுக்கோஸ் பிஸ்கட்டை ஒப்பிட்டுப் பார்த்த பரிசோதனைகளில் தெள்ளத் தெளிவாக நிரூபிக்கப்பட்டுவிட்டது: வைட்டமின் சத்திலும், மொத்த போஷாக்குத் தன்மையிலும் உயர்ந்தது க்ளுக்கோஸ்-D பிஸ்கட் தான். இனிமைக்கும், சுவைக்கும், மொறுமொறுப்புக்கும், அதிகமாக விரும்பப்படுகிறது. சக்தி வேண்டுமா— க்ளுக்கோஸையும் விட 20 சதவிகிதம் அதிக சக்தியைத் தருகிறது க்ளுக்கோஸ்-D. பிரிட்டானியா க்ளுக்கோஸ்-D பிஸ்கட்— தித்திக்கும் சக்தி!
BRITANNIA Glucose
BRITANNIA Glucose-D
இப்போது கண்கவரும் புதிய பேக்கிலே
எனவேதான், வேறெந்த க்ளுக்கோஸ் பிஸ்கட்டையும் விட அதிக மக்களைக் கவர்ந்துள்ளது பிரிட்டானியா க்ளுக்கோஸ்-D
பிரிட்டானியா
பிரிட்டானியா பிஸ்கட்டுகள் மிகச் சிறந்தவை
லின்டாஸ்-BBC-GL-10-140 TM




''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

---

# தமிழ்நாடு சாம்பியன்களில் சிலர்



விஜயராகவன்

கூடைப் பந்தாட்டத்தில் தமிழகத்தின் பெருமையை உயர்த்துபவர்களில் ஒருவர். பிறந்தது மன்னார்குடி. சார்ட்டர்ட் அக்கௌண்ட்டண்ட். ஆசியத் தலைநகர்களில் கூடைப் பந்தாட்டப் போட்டிகளில் ஆடியவர். இருபத்தி மூன்று வயது. டாட்டா நிறுவனத்தில் பணிபுரிகிறார்.



ஞானசேகரன்

இந்தியாவில் அதிவிரைவு ஓட்ட வீரர் எனப் புகழ் பெற்றவர். சர்வ ராஜ்யப் போட்டியில் தங்கப் பதக்கம் பெற்றவர். அயல் நாடுகள் பலவற்றில் போட்டியில் கலந்து கொண்டு பரிசு பெற்றுள்ள இவர் மதுரையில் ரயில்வே டிவிஷனல் சூபரிண்டெண்ட் ஆபீஸில் சீனியர் கிளார்க்.



குமாரி மீரா உம்மன்

சென்னை வைஷ்ணவக் கல்லூரியில் நான்காவது வருஷம் படிக்கிறார். தமிழகத் தூரம் தாண்டல் (Long Jump) சாம்பியன். இண்டர் ஸ்டேட் போட்டியிலும் 5.65 மீட்டர் ரிக்கார்டு கண்டு பெருமை பெற்றிருக்கிறார்.

பாலமுருகானந்தம்

அண்ணாமலை சர்வ கலாசாலையில் பி. எ. ரஸாயனப் பட்டதாரி. எடை தூக்கும் போட்டியில் 'மிடில் வெயிட்' வகுப்பு தமிழக சாம்பியன். இந்தோ-ரஷ்யப் பந்தயத்துக்கு விரைவில் மாஸ்கோ செல்லவிருக்கிறார்.



ஆர். தினேஷ்

வயது பதினேழு. டான் பாஸ்கோ பள்ளி மாணவர். புது தில்லியில் தேசிய சப் ஜூனியர் டென்னிஸ் போட்டியில் வென்றிருக்கிறார்: லண்டனிலும் பயிற்சி பெற்றிருக்கிறார்.



அநுருயா பாய்

'1975ம் வருஷத்தின் சிறந்த விளையாட்டுக்காரர்' என்ற விருதை இந்திய ரயில்வே இவருக்கு வழங்கியிருக்கிறது. இருபத்தி மூன்று வயதானவர். சர்வதேச ஓட்டப் பந்தயங்களில் தமிழகத்தின் பெருமையை உயர்த்தி வருகிறார்.

ஓட்ட வீரர் கே. நடராஜன்

மதுரை ஸ்டேஷனில் ஸீனியர் டிக்கெட் இன்ஸ்பெக்டர். நூறு மீட்டரில் தேசிய ரிகார்டு கண்டவர். இருநூறு மீட்டர் பந்தயத்தில் மார்ஷல் டிட்டோ தங்கப் பதக்கம் பெற்றவர்.



டி. அருள்

1975ம் ஆண்டு தேசிய சாம்பியனாக எடை தூக்கும் போட்டியில் வென்றவர். தென்னிந்திய ரயில்வேயில் டிக்கட் கலெக்டர்!



மிஸ் அஹ்லுவாலியா

இரண்டரை வருஷங்களுக்குத் தான் டென்னிஸ் பயிற்சி பெற்றார். இந்திய ஜூனியர் சாம்பியன் ஆகிவிட்டார். விம்பிள்டனில் இவர் கலந்துகொள்ளவிருக்கிறார்.

தனசேகரன்

மார்க்கரின் பின்னே பந்து தான் எடுத்துப் போட வேண்டுமா என்ன? மாம்பலம் மார்க்கர் தியாகராஜனின் புதல்வர் தனசேகரன் டென்னிஸில் தமிழக ஜூனியர் சாம்பியன் ஆகியுள்ளார்.



குமாரி ஏன்ஜல் மேரி

உயரம் தாண்டல் சாம்பியன். ஆசியப் பந்தயங்களில் கலந்து கொண்டிருக்கும் இவர் ரயில்வே ஜெனரல் மானேஜர் காரியாலயத்தில் சீனியர் கிளார்க்.

■ ■ ■ ■ ■ ■ ■ ■ ■ ■ ■ ■ ■ ■ ■ ■ ■ ■ ■ ■ ■

வேதமூர்த்தி லாஸர்

பள்ளிக்கூடத்துக்கு 'டிமிக்கி' கொடுத்துவிட்டு நாலைந்து மணி நேரமும் கேரம் போர்டு ஆடியவர்! மூன்றும் பாரத்துக்கு மேல் உயர முடியவில்லை. ஆனால் கேரம் தேசிய சாம்பியனாக உயர்ந்து விட்டார். பல்லவன் டிரான்ஸ்போர்ட்டில் மெக்கானிக்.

■ ■ ■ ■ ■ ■ ■ ■ ■ ■ ■

ரோஜர் மாரி

சென்னை சர்வ கலாசாலை ஹாக்கி கோஷ்டியின் காப்டன். இரண்டு வருஷங்கள் அனைத்துச் சர்வ கலாசாலை ஹாக்கி விளையாட்டுக் கோஷ்டியில் இடம் பெற்றவர். போர்க்களத்துக்கு விரைவில் ஹாக்கிப் போட்டியில் கலந்துகொள்ளச் செல்கிறார்.

■ ■ ■ ■ ■ ■ ■ ■ ■ ■ ■

குமாரி கவிதா அகர்வால்

ஸ்டெல்லா மேரி பி. யூ. ஸி. மாணவி. கான்பூரில் நடைபெற்ற அகில இந்திய சர்வ கலாசாலை நீச்சல் போட்டியில் இரண்டாம் இடம் பெற்றவர்.

■ ■ ■ ■ ■ ■ ■ ■ ■ ■ ■

ஹரி, சந்திரசேகர்

விவேகானந்தா கல்லூரி மாணவர் ஹரியும் வைஷ்ணவக் கல்லூரி மாணவர் வி. சந்திரசேகரும் டேபிள் டென்னிஸில் தமிழகத்துக்குப் பெருமை தேடித் தருகிறவர்கள். விரைவில் இருவரும் ஜப்பான் செல்லவிருக்கிறார்கள்.





பாஸ்கர், பிரபாகர்

மாண்ட்ரியால் ஒலிம்பிக் செல்கிறார் பாஸ்கர். பதினைந்து வயதில் ஹாக்கி ஆடத் தொடங்கியவர். பல சர்வதேசப் பந்தயங்களில் வெற்றிகளுக்கு உதவியுள்ளவர். 'லெப்ட் ஹாப்பாக இந்திய ஹாக்கி கோஷ்டியில் ஆடி வருகிறார். ஐ. ஸி. எப். பிரபாகரும் 'உலகக் கோப்பை' புகழ் மிளிரப்போடு மாண்ட்ரியால் ஒலிம்பிக்கில் கலந்து கொள்கிறார்.



வேங்கடேஷ் குமார்

அழகப்பா தொழில் நுணுக்கக் கல்லூரி மாணவர். வாலிபால் ஆட்டத்தில் அனைத்துச் சர்வகலாசாலைகளுக்கான கோஷ்டியில் இடம் பெற்றவர். இவருக்குச் சென்னை சர்வ கலாசாலை ஆயிரம் ரூபாய் ஸ்காலர்ஷிப் வழங்கிக் கௌரவித்திருக்கிறது.



எஸ். வாணி

ரிசர்வ் பாங்கில் பணி புரிபவர். கேரம் விளையாட்டில் தமிழ் நாட்டில் பெண்கள் நம்பர் ஒன். அனைத்திந்தியாவில் இந்துஸ்தான் டைம்ஸ் நடத்திய போட்டியில் நெ. 2.

■ ■ ■ ■ ■ ■ ■ ■ ■ ■



பரத் ரெட்டி

கிரிக்கெட்டில் வெகு வேகமாக முன்னணிக்கு வந்து கொண்டிருக்கும் இளைஞர். விக்கெட் கீப்பர். பச்சையப்பன் கல்லூரி மாணவர். இலங்கைக்குக் கிரிக்கெட் பந்தயம் ஆடச் சென்றிருக்கிறார்.



விஜயலக்ஷ்மி

தேசிய துப்பாக்கி சுடும் போட்டியில் வெள்ளிப் பதக்கம் பெற்றவர் இவர். இவரது சகோதரர் உதயகுமாரும், சகோதரி சந்த்யாவும் துப்பாக்கி சுடும் போட்டியில் வல்லவர்கள்.


காப்பி
அடிக்க
முடியாதது!
ஜீவனுள்ள ஒரே காபி
நரசுஸ்
"தெர்மலோ" காபி
''தெர்மலோ'' முறை தயாரிப்பு
நரசுஸ் காபியின் தனிச் சிறப்பு.
நற்சுவை மிகுந்தது.
நறுமணம் கொண்டது.
நாளும் புதியது.
நரசுஸ் காபி!
தயாரித்த 24 மணி
நேரத்திற்குள்
தமிழகத்தில் உள்ள எங்கள்
எல்லா கிளைகளின் மூலம்
வினியோகம்
செய்யப்படுகிறது.
ADWAVE/NCC 410 TAM
நரசுஸ் காபி கம்பெனி.
சேலம்-636 007
கிளைகள்:- பாண்டிச்சேரி &
தமிழகமெங்கும்.

கல்கி

மலர் 35

இதழ் 43

# மேலும் சில சலுகைகள்

நிதி அமைச்சர் திரு சி. சுப்பிரமணியம் மேலும் சில வரிச் சலுகைகளை அறிவித்திருக்கிறார்.

சென்ற ஆண்டு எதிர்பார்த்த அளவுக்குக் குறைவாகவே பட்ஜெட்டில் துண்டு விழுந்ததால் இந்த வரிச் சலுகைகளைக் காட்ட முடிந்திருக்கிறது. எனினும், புதிய வரிச் சலுகைகள் உணர்த்தும் வேறு ஓர் அம்சமும் உண்டு. நாட்டின் பொருளாதாரத்தில் சமீபத்திய பட்ஜெட்டுக்குப் பிறகு கணிசமான அபிவிருத்தி ஏற்பட்டிருக்கிறது. இந்த முன்னேற்றம் மேலும் சில வரிச் சலுகைகளை வழங்க நிதி அமைச்சருக்குத் துணிவைத் தந்திருக்கிறது.

வரிகளைக் குறையுங்கள்; கட்டுப்பாடுகளை நீக்குங்கள், பொருளாதார முன்னேற்றத்துக்கு இதுவே தாரக மந்திரம் என்றார் ராஜாஜி. சிறிதளவு அந்த மார்க்கத்தில் அடியெடுத்து வைத்ததே பெருமளவு பலனைத் தந்துள்ளதைக் காண்கிறோம்.

நிதியமைச்சர் இத்துடன் திருப்தியடைந்து விடக் கூடாது. இதே பாதையில் மேலும் தைரியமாக அடியெடுத்து வைக்க வேண்டும். அத்துடன் திரு எம். வி. அருணாசலம் அவர்களைத் தலைவராகக் கொண்ட இந்தியத் தொழில் வர்த்தகச் சங்கங்களின் கூட்டாணி சமீபத்தில் தெரிவித்துள்ள ஆக்கபூர்வமான யோசனைகளைச் செயல்படுத்துங்கள் என்றும் கோருகிறோம். முதலீடுகள் பெருகவும் கடன் வசதிகள் அதிகரிக்கவும் வழி காணுங்கள் என்கிறோம். சோஷலிஸ வாதிகளின் சித்தாந்தக் கோஷங்களைவிடத் தேசப் பொருளாதாரம் முக்கியமானது.

# தீப்பிடித்த குடிசைகள்

இத்தாலியில் பூமி அதிர்ச்சியால் ஆயிரம் பேர்கள் மடிந்தார்கள் என்று படிக்கும்போது மனிதாபிமானம் உள்ள எவனும் கலங்கித்தான் போவான். என்றாலும், மதுரையில் தீ விபத்தில் முந்நூறு குடிசைகள் சாம்பலாயின; சென்னையில் எழுபது குடிசைகள் தீக்கிரையாயின என்று படிக்கும்போது நம் மனம் அதைவிட அதிகமாகப் பதறுவது இயல்பு. கோடை வந்தால் கூடவே குடிசைகளுக்கு ஆபத்தும் வந்து விடுகிறது.

பாதிக்கப்பட்ட மக்களுக்கு அரசாங்க உதவி கிட்டாமல் போகாது. அதே நேரத்தில் இதற்கு ஒரு நிரந்தரப் பரிகாரம் காண முடியாதா என்ற கேள்வியும் எழுகிறது.

குடிசை மாற்று வாரியம் சிறந்த சேவை செய்து வருகிறது; உண்மை. ஆனால் அதனால் பயன்பெறும் மக்கள் தொகை மொத்தமுள்ள குடிசை வாழ்வோரில் ஒரு சிறு சதவிகிதமாகத்தான் இருக்க முடியும். மேலும் புதிது புதிதாக நகர்ப்புறங்களில் குடிசைக் குடியிருப்புக்கள் தோன்றியவண்ணம் உள்ளன. தீ விபத்தும் ஒரு நிரந்தர ஆபத்தாகவே விளங்குகிறது.

ஓலைக் கூரைகளுக்குத் தடை விதிப்பதும் கூடவே அஸ்பெஸ்டாஸ் ஓடுகளை மலிவு விலைக்கு ஏழைகளுக்குக் கிடைக்கச் செய்வதும் சிறந்ததொரு சமூக நலத் திட்டமாக விளங்கும்.

# ரத்தினத்தை இழந்தோம்

கலைமகள், மஞ்சரி பத்திரிகைகளின் அதிபர் திரு ராமரத்தினம் திடுமென்று காலமாகி அவரை அறிந்தவர்கள் அனைவரையும் அதிர்ச்சிக்கும் ஆறாத் துயருக்கும் ஆளாக்கிவிட்டார்.

திரு ராமரத்தினம் நிர்வாக ஆற்றலுடன் அடக்கமான சுபாவம் கொண்டவர். தம்மை அணுகியவருக்கு அன்புடன் உதவும்

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற - எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா -- பாரதியார்



பண்பினர். திரு கி. வா. ஜ., ஆர்வி, தி.ஜ.ர. போன்றஅறிஞர் களைக்குவித்து அவர்கள் துணை யுடன்கலைமகள், கண்ணன், மஞ் சரி ஆகிய பத்தி ரிகைகளைத் தர மான முறையில் நடத்திவந்தார். மெட்ராஸ் லா ஜர்னல அச்சகம் அதே பெய ரில் சட்ட நுணுக்கங்கள் அடங்கிய சஞ்சிகை ஒன்றையும் வெளியிட்டு வருகிறது. கலைமகள் பத்திரிகையால் மட்டுமின்றிக் கலைமகள் பதிப் பகத்தாலும் ஏராளமான எழுத்தாளர்கள் பயன் அடைந்துள்ளனர். பாராட்டுப் பெற்ற தன் எழுத்தைப் புத்தக உருவில் பார்ப்பதை விட ஓர் எழுத்தாளனுக்குப் பெருமையும் மகிழ்ச்சியும் தரவல்லது எது? இவ்விதம் இலக்கியத் துறைக்கு அளப்பரிய பணி புரிந் துள்ள திரு ராமரத்னம் நுணுக்கம் மிகுந்த பிரிட்ஜ் விளையாட்டில் சூரராய் விளங்கினர்.

திரு ராமரத்தினத்தின் தகப்பனர் நாராயணசுவாமி அய்யர் கல்கி பத்திரிகை ஆரம்பமானபோது இதற்கு நல்லதோர் அச்சு இயந்திரத்தைத் தேர்ந்தெடுத்து நிறுவித் தந்து உதவி தமது நல்லாசிகளையும் வழங்கினர். அவரது மகன் ராமரத்னம் அவர்களும் தகப்பனரைப் போலவே இந்த ஸ்தாபனத்தினிடமும், இதன் நிர்வாகிகள் ஊழியர்களிடமும் அன்பைப் பொழிந்தார்.

திரு ராமரத்தினத்தின் மறைவால் நாமே ஆறுதலின்றித் தவிக்கும்போது அவரது குடும் பத்தினருக்கும் கலைமகள் காரியாலயத்தினருக் கும் என்ன தேறுதல் கூற முடியும்?

---

# மூஷிகரின் சுற்றுலா

“உஷ்! அப்பாடா! வெய்யில் தாங்கலே. கொடைக்கானலுக்கு ஒரு ‘டிரிப்’ போய் வரலாம்'' என்று மூட்டை முடிச்சுக்களுடன் புறப்பட்டார் மூஷிகர்.

பஸ் மலை ஏறத் தொடங்கிச் சற்று நேரம்கூட ஆகவில்லை. வழியில் போலீஸ் வண்டி, ஆம்புலன்ஸ், தீயணைப்பு வாகனம் முத லானவை நிறைய நிற்கக் கண்டு கதிகலங்கி விட்டார். விசாரித்ததில் கேரளத்திலிருந்து வந்த டூரிஸ்ட் பஸ் ஒன்று மலைச் சரிவில் உருண்டுவிட்டதாகத் தெரிய வந்தது. பயங்கர மான பள்ளத்தாக்கில் பல பேர் எட்டிப் பார்த்தார்கள். மூஷிகர் இறுகக் கண்களை மூடிக் கொண்டு, ''பஸ் விழுந்தபோது பயணிகள் மனம் என்ன பாடுபட்டிருக்கும்? கண் மண் தெரியாமல் ஏன்தான் இப்படி ஓட்டுகிறார்களோ?'' என்று ‘கமெண்ட்’ அடித்தார்.

இவர் ஏறி இருந்த பஸ்ஸின் ஓட்டுனருக்குக் கோபம் வந்துவிட்டது. ''இப்படி ஒட்டு மொத்தமாய் எல்லாரையும் திட்டித் தீர்க்கா தீங்க. வழக்கமாய் இந்தப் பாதையில் பஸ் ஓட்டுகிறவர்கள் இதில் உள்ள ஆபத்துக்களை உணர்ந்து ஜாக்கிரதையாகத்தான் இருப் பாங்க. என் எஜமான் சொல்வாரு: ‘ராஜா மணி! இருபது வருஷமா ஓட்டறோமே, எக்ஸ்பர்ட் ஆயிட்டோம்னு கர்வப்படாதே! வண்டி கண்டிஷனா இருக்குன்னு அலட்சியமா இருந்துடாதே’ம்பாரு. அதை நான் மறக் கறதேயில்லை. மலையை நாம் ஜெயிச்சுட்ட தாக நினைக்கவே கூடாது. இடீர்னு ஒரு நாள் மலை நம்மை ஜெயிச்சுடும்!''

ராஜாமணி போட்ட போட்டில் கொடைக் கானல் போய்ச் சேரும் வரை மூஷிகர் வாய் திறக்கவேயில்லை. அங்கே பயணக் களைப்புத் தீர வெந்நீரில் குளிக்கலாம் என்று நினைத் தார். குழாயில் தண்ணீர் வரவில்லை! ஹோட்டலில் போய்ச் சாப்பிட்டுவிட்டு நீர் அருந்த டம்ளரை எடுத்தார். ஒரே கலங்கல்!

''சுற்றுலா அபிவிருத்தி என்று அமர்க்களப் படுத்தினல் ஆயிற்று. அடிப்படை விஷயங் களைக் கவனிக்காமல்...?'' என்றார் மூஷிகர்.

அது நகரிய இன்ஜினீயர் காதில் விழுந்து விட்டது. கோபத்துடன் திரும்பி, ''யார் ஐயா, எதிர்பார்த்தார்கள், மழை இப்படி மோசம் பண்ணும் என்று? கொடைக்கானல் சரித்திரத்திலேயே இப்படி ஒரு வறட்சி நிலை தோன்றியதில்லை, தெரியுமா?'' என்று ஒரு போடு போட்டார். பிறகு பிரச்சினையைச் சமாளிக்க நகரியத்துக்கு உள்ள குறைந்த வசதிகளைக் கொண்டு என்னென்ன செய் திருக்கிறார்கள் என்று பட்டியல் போட்டார்.

என்றாலும் சீசன் ரொம்ப டல்தான். ரொம்பப் பேர் விஷயமறிந்து வரவேயில்லை. வந்தவரில் பலர் நிலைமை உணர்ந்து திரும்பி விட்டனர் எனக் கண்டார் மூஷிகர்.

நாமும் திரும்ப வேண்டியதுதான் என்று அவர் தீர்மானித்த சமயத்தில் வானம் இருட் டிக்கொண்டு வந்தது. தூற்றலும் ஆரம்பித் தது. ‘பேஷ்! மழை பெய்யட்டும். குடிநீர்த் தேக்கம் நிரம்பட்டும். ஒரு வாரம் பத்து நாள் கழித்து நிறையச் சுற்றுலாப் பயணிகள் வரட்டும்’ என்று விநாயகரின் கருணைக்குப் பிரார்த்தித்தபடியே புறப்பட்டார் மூஷிகர்.




ஃபராக்கா
ஓம் சாந்தி பூஷன்!
ஓம் சாந்தி பூஷன்!
ஓம் சாந்தி பூஷன்!
ஜனதா மீல்ஸ்
ஹோட்டல் பண்ட விலைக் கட்டுப்பாடு



ஸ்ரீ புவனேச்வர்யை நம:

ஸ்ரீ ஸத்குரு ஸதாசிவ ப்ரம்மேந்திர
ஸரஸ்வத்யவதூத ஸ்வாமிகள் அதிஷ்டானம், புதுக்கோட்டை

## ஸ்ரீ ஜய துர்கா மந்த்ர ஸஹித, ஸ்ரீ வனதுர்கா மஹா மந்த்ர ஸம்புடித ஸ்ரீ துர்காஸூக்த மஹாமந்த்ர

# லக்ஷ ஹோம அழைப்பிதழ்

**ஸ்ரீ நள-௵ சித்திரை மீ 29௳ முதல் வைகாசி மீ 25௳ வரை**
**(11-5-76 முதல் 7-6-76 வரை)**

நவதுர்காம் மஹாகாளீம் ப்ரம்மவிஷ்ணு சிவாத்மிகாம் ।
த்ரிகாலக்ஞானஸம்பன்னாம் நமாமி புவனேச்வரீம் ॥

ஸர்வலோக ஜனனியான ஸ்ரீ புவனேச்வரியின் திருவருளைப் பெற்று விளங்கும் நவஸாலபுரி என்ற புதுக்கோட்டை மாநிலத்தில் ஜட்ஜ் ஸ்வாமிகள் என்று புகழ்பெற்ற ஸ்ரீ ஸத்குரு ஸதாசிவ ப்ரம்மேந்த்ர ஸரஸ்வத் யவதூத ஸ்வாமிகளின் அதிஷ்டானத்தில் ஸ்ரீ ஜட்ஜ் ஸ்வாமிகள் அவர்களின் ஜயந்தி மகோத்ஸவத்தில் உலக க்ஷேமத்தைக் கருதி நள-௵ சித்திரை-மீ 29௳ (11-5-76) செவ்வாய்க் கிழமை அஸ்த நக்ஷத்ரம் கூடிய சுபயோக சுபதினத்தில் ஸ்ரீ ஜய துர்காமந்த்ர ஸஹித ஸ்ரீ வனதுர்கா மஹாமந்த்ர ஸம்புடித ஸ்ரீ துர்கா ஸூக்த மஹாமந்த்ர லக்ஷ ஹோமம் ஆரம்பிக்கப்பெற்று ஒரு நட்சத்திர மண்டல காலம் வைகாசி-மீ 25௳ (7-6-76) வரை 28 நாட்கள் மந்த்ர உபாஸகர்களான ரித்விக்குகளைக் கொண்டு வைதிக, தாந்த்ரீக விதிப்படி மேலே கண்டுள்ள ஸ்ரீ துர்காஸூக்த லக்ஷ ஹோமத்தை நடத்துவதாக, ஸ்ரீமத் ஸத்குரு சாந்தானந்த ஸ்வாமிகள் அவர்கள் ஸ்ரீ புவனேச்வர தேவியின் ப்ரேரணை பேரில் ஸங்கல்பித்துள்ளார்கள்.

துஷ்ட தேவதைகளினால் மக்களுக்கு ஏற்படும் கொடிய அக்ஞானமாகிய தீய சக்திகளை உண்டாக்கும் துஷ்டர்களை அழித்து, 27 நக்ஷத்திரங்களில் பிறந்துள்ள மக்கள் எல்லோருடைய நல்லறிவாகப் பிரகாசித்து வரும் புத்தி சக்தியான அன்னை ஸ்ரீ புவனேச்வரி, எல்லோரையும் நல்லறிவுடன், நல்வழியில் செல்லுமாறும், குறைவற்ற செல்வத்துடன் இன்புற்றிருந்து வரவேண்டும் என்பதற்காகவே ஸ்ரீமத் ஸத்குரு சாந்தானந்த ஸ்வாமிகள் அவர்கள் ஸ்ரீ மாதா புவனேச்வரி தேவியின் ஸந்நிதியில் தமது பரம குரு நாதரின் ஜயந்தி மகோத்ஸவத்தில் உலக மக்கள் அனைவருடைய க்ஷேமத்துக்காகவே மேலே கண்டுள்ள மகா சக்தி வாய்ந்த லக்ஷ ஹோமத்தை 28 நாட்கள் நடத்த ஸங்கல்பம் செய்து கொண்டுள்ளார்கள்.

ஆதி பராசக்தியான ஸ்ரீ மாதா புவனேச்வரியே துர்க்கா தேவியாக ரூபம் கொண்டு துர்கமன் என்ற அசுரனை அழித்தாள். கலியில் துக்க நிவ்ருத்தி செய்ய துர்க்கைக்கு மிஞ்சிய தெய்வமில்லை. உலக மக்கள் யாவருக்கும் ஏதாவது ஒரு வழியில் துக்கம் ஏற்படுவதை மக்கள் அனைவரும் அறிந்துகொண்டேயிருக்கிறோம். சந்தோஷமாக இருப்பவர்களையும் தத்சமயம் இவ்வுலகத்தின் சூழ்நிலை துக்கம் அடையச் செய்து விடுகிறது. துக்கத்தைப் போக்க துர்க்கா தேவியைச் சரண் அடைவது ஒன்றே உற்ற வழியாகும் என்பதை நல்லறிவு மிக்க உத்தமர்கள் அனைவரும் மறக்காமல் நினைவில் இருத்தி வைத்துக் கொள்ள வேண்டும்.

சத்ருக்களை அறவே ஒழிப்பதில் முதல் தரமான தெய்வம் ஸ்ரீ துர்கா தேவி என்பதை மகான்கள் நன்கறிந்துகொண்டு, ஸ்ரீ துர்காம்பிகையைச் சரணமடைந்து, அன்னையை வழிபட்டு, வெற்றி கண்டுள்ளார்கள் என்பதை உலகில் உள்ள நன்மக்களாகிய அனைவருக்கும் மேலும் தெரியப்படுத்துகிறோம்.

ஸ்ரீ துர்கா ஸூக்த லக்ஷ ஹோமம் எல்லாத் துன்பங்களையும் போக்கி, பாவங்களை அழித்து தாரித்ரியம், துக்கம், சத்ரு பயத்தையும் விரட்டி, எல்லா நன்மைகளையும் தந்து, இருக்க இடம், விளை நிலம் அளித்து, பிறவிக் கடலைக் கடக்க உதவி செய்வதாகும். வேதம் போற்றுகிற ஆதி பராசக்தியாகிய ஸ்ரீ துர்கா தேவியின் சக்தியை அளவிட்டுக் கூற இயலாது.

இக் கைங்கர்யத்தில் முழு மனதுடன் ஈடுபட்டு, மக்களின் எல்லாக் கொடிய இன்னல்களையும், தீய சக்திகளையும் ஸ்ரீ துர்கா தேவியின் திருவருளைக் கொண்டு விரட்டி ஒழித்து, உலக மக்கள் எல்லோருக்கும் எல்லாவிதமான இன்பங்களையும் உண்டாக்கிக் கொடுக்க வேண்டுமென சத்ய சங்கல்பம் செய்து கொண்டு, மனிதாபிமானத்துடன் லக்ஷ ஹோமத்தை ஸ்ரீ புவனேச்வரியின் சந்நிதியில் நடத்திக் கொடுக்க ஊக்கத்துடன் முன்வர வேண்டுமென ஸ்ரீ ஸத்குரு சாந்தானந்த ஸ்வாமிகள் அவர்கள் உள்ளன்புடன் அனைவருக்கும் தெரியப்படுத்துகிறார்கள்.

தினசரி நடைபெறும் ஹோமத்திற்கு ரூ. 900 நன்கொடையாக அளித்து ஹோமத்தை நடத்திக் கொடுக்கும் உத்தமர்களுக்கு ஹோம பூஜையில் வைத்த சேலம் ஸ்கந்தாச்ரமத்தில் ப்ரதிஷ்டை செய்துள்ள ஸ்ரீ அஷ்டாதசபுஜ மஹாலக்ஷ்மி துர்கா தேவி திருவுருவமும் ஸ்ரீ புவனேச்வரி மாதாவின் திருவுருவமும் உள்ள தங்க டாலர் ஒன்று ஹோம ப்ரஸாதங்களுடன் அனுப்பப்பெறும்.

ஸ்ரீ துர்கா ஸூக்த லக்ஷ ஹோம பூஜைகளுக்கு ரூ. 18 நன்கொடை கொடுத்து உதவும் உத்தமர்களுக்கு ஹோம பூஜையில் வைத்த சேலம் ஸ்ரீ கந்தாச்ரமத்தில் ப்ரதிஷ்டை செய்துள்ள ஸ்ரீ அஷ்டாதசபுஜ மஹா லக்ஷ்மி துர்கா தேவி திருவுருவமும், ஸ்ரீ புவனேச்வரி மாதா திருவுருவமும் உள்ள வெள்ளி டாலர் ஒன்று ஹோம ப்ரஸாதங்களுடன் அனுப்பப் பெறும். உலக மக்களின் நலன் ஒன்றையே உறுதியாக நினைத்து மனிதாபிமானத்துடன் உத்தமர்கள் அனைவரும் லக்ஷ ஹோம கைங்கர்யத்தில் பங்கு கொண்டு க்ஷேமத்தை அடைந்துய்யக் கோருகிறோம். இருபத்தேழு நக்ஷத்திரங்களில் பிறந்துள்ள அனைவருக்கும் ஸகல பீடா பரிகாரமாகச் செய்யப்படும் மேற்கண்ட லக்ஷ ஹோமத்தில் மக்கள் அனைவரும் முழு மனத்துடன் கலந்து கொண்டு துக்க நிவ்ருத்தி பெற்று இன்புற்றிருந்து வரவேண்டுமாக மேலும் கோருகிறோம்.

---

குறிப்பு: பொருளுதவி செய்பவர்கள் கீழ்க்கண்ட விலாசத்துக்கு அனுப்பி வைக்கக்கோருகிறோம்:

**ஸ்ரீமத் சாந்தானந்த ஸ்வாமிகள் ஆக்ஞைப்படி: S. வைத்யநாத சாஸ்திரிகள்**
**காரியதரிசி, அதிஷ்டானம், புதுக்கோட்டை, புதுக்கோட்டை ஜில்லா, தமிழ்நாடு**

மணியார்டர் மூலம் நன்கொடைகள் அனுப்புவோருக்கு ரசீதும் ப்ரசாதங்களுடன் அனுப்பப்பெறும்.
ஸ்ரீ லக்ஷ ஹோம ரசீதை ஸ்ரீ துர்கா ஹோம பூஜையில் வைக்கப்பட்டுள்ள டாலர் கிடைக்கும் வரை ஜாக்கிரதையாக வைத்துக் கொள்ளுமாறு கோருகிறோம்.

# ஜீவகாருண்யம் 4

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சீ காமகோடி சங்கராசாரிய சுவாமிகள்



'அனைத்து அறன்', அதாவது ஸர்வ தர்மமும் என்னவென்றால் அவரவரும் 'மனத்துக் கண் மாசிலன் ஆதல்' — அதாவது தங்கள் உயிரைத் தாங்களே துளி அழுக்கில்லாமல் நிர்மலமாகச் சுத்தம் செய்து கொள்வதுதான் என்கிறார் திருவள்ளுவர். கர்மாநுஷ்டானத்தால் அவரவரும் சித்தசுத்தி ஏற்படுத்திக் கொள்ள வேண்டும் என்கிற வைதிக சம்பிரதாயத்தைத்தான் இங்கே திருக்குறளும் சொல்கிறது. முதலில் இவன் தன்னைத் தானே சுத்தம் பண்ணிக் கொள்ள வேண்டும். இது இல்லாமல் பரோபகாரம், ஸோஷல் ஸர்வீஸ் என்று ஆரம்பித்தால் அது வெற்றுக் காரியம்தான்.

தான் அடங்கியிருக்க வேண்டும், பக்தியோடு ஈசுவர சேவை என்று நினைத்துச் சமூக சேவை செய்ய வேண்டும். அப்போதுதான் அது பலனளிக்கும். அந்தரங்கசுத்தமில்லாமல் செய்கிற காரியங்கள் வெறும் படாடோபமாகவும், 'ஷோ'வாகவுமே முடிந்து போகும். இந்தப் படாடோபத்தால் 'சேவை' என்று செய்கிறவனுக்கு அகங்காரம் மேலும் ஜாஸ்தியாகத்தான் செய்யும். அகங்காரம் தொலைவதற்கு உதவ வேண்டிய சேவையே அடக்கமும் பணிவும் பக்தியும் அன்பும் இல்லாமல் செய்தால் அகங்காரத்தை அதிகமாக்கிவிடும். குளிக்க வேண்டும் என்று போய்ச் சேற்றை வாரிப் பூசிக் கொண்டதாகிவிடும்.

தான் சுத்தமாவதுதான் ஸர்வ தர்மமும் என்றால் இது சுயநலம் மாதிரி அல்லவா இருக்கிறது என்று தோன்றலாம். ஆனால் இது நாம் லோக ரீதியில் நினைக்கிற மாதிரியான சுயநலம் இல்லை. பிறத்தியாரைக் கஷ்டப்படுத்தியாவது நாம் இந்திரிய சுகங்களைப் பூர்த்தி பண்ணிக் கொள்வதுதான் சுயநலம். மனசைச் சுத்தப்படுத்திக் கொள்ள வேண்டுமானால் நாம் கஷ்டப்பட்டாவது பிறத்தியாருக்கு நல்லதே பண்ண வேண்டியதாகிறது. இது இந்திரிய சௌக்கியங்களிலிருந்து நம் உயிரை நாமே மீட்டு சாசுவதமான பேரின்பத்தில் சேர்ப்பதற்கு உதவுகிறது. 'உபகாரம்' என்றால் பிறத்தியாருக்குச் செய்தால் மட்டும் போதுமா? இதோ நமக்கென்று ஈசுவரன் ஓர் உயிரைக் கொடுத்த மாதிரி கொஞ்சம் வெளியே அவிழ்த்துவிட்டிருக்கிறானே, மனஸ் என்ற ஒன்றைக் கொடுத்து அதை நல்லது கெட்டது இரண்டிலும் ஆடுகிற மாதிரிவிட்டிருக்கிறானே! இந்த உயிருக்கு மட்டும் நாம் உபகாரம் பண்ணாமல் இருக்கலாமா? மனசை நல்லதிலேயே செலுத்தி, பகவான் தந்திருக்கிற வாக்கு, சரீரம் எல்லாவற்றையும் நல்ல பேச்சு, நல்ல காரியங்கள் இவற்றிலேயே பிரயோஜனப்படுத்தி இந்த உயிரைப் பேரின்ப நெறியில் சேர்க்க நாம் கடமைப் பட்டிருக்கவில்லையா? சின்னதான சுயநலத்தைவிட்டு, இந்தப் பெரிய 'சுயநல'த்துக்கு எல்லோரும் பாடுபடத்தான் வேண்டும்.

இப்படிச் செய்வதற்குப் பரநலப் பணிகளே ரொம்பவும் சகாயம் செய்கிறது. இதிலே ஒரு வேடிக்கை — இவன் மனஸ் சுத்தமாக இருந்தால்தான் பரோபகாரம் நிஜமாக நடக்கிறது, பலன் தருகிறது; பரோபகாரத்தால் தான் இவன் மனமே சுத்தமாகத் தொடங்குகிறது என்றால் முரண் Contradiction மாதிரித்தானே இருக்கிறது? ஆனால் முரண்பாடு இல்லை. முதலில் இவனுக்கு மனஸ் சுத்தமாக வேண்டும் என்ற **தாபம் இருந்தாலே போதும்**. மனஸ் லேசில் கட்டுப்பட்டு வரத்தான் வராது. சொந்த சௌக்கியத்தையே நினைத்து அது திரும்பத் திரும்ப ஓடிக் கொண்டுதான் இருக்கும். அப்போது, 'ஐயோ, இது திருந்த வேண்டுமே' என்ற உண்மையான கவலை இருந்தால், இந்த விசாரத்துக்கே ஒரு நல்ல சக்தி (effect) உண்டு. இப்படி ஒரு தாபத்தோடு பரோபகார காரியங்கள் என்ற லகானைப் போட்டு அப்போதைப்போதும் ஓடுகிற மனஸை இழுத்து ஒரு சமூகத் தொண்டில் செலுத்த வேண்டும். ஒன்றுக்கொன்று போஷித்து இட்டு நிரப்புவது, Complementary என்கிறார்களே, அப்படிப் பரோபகாரப் பணி மனஸைக் கொஞ்சம் கொஞ்சமாகச் சுத்தம் பண்ணப் பண்ண, அந்தச் சித்தசுத்தியால் நாம் செய்கிற தொண்டும் கொஞ்சம் கொஞ்சமாகச் சுத்த

# இரட்டை யோகம்





✖ திருச்சி பாரத் ஹெவி எலெக்ட்ரிகல்ஸ் தொழில் நகரத்தில் சமீபத்தில் தேசிய வாலிபால் சாம்பியன் போட்டி நடைபெற்றது. தமிழகத்தைப் பொறுத்த வரையில் வாலிபாலுக்கு இது வெள்ளி விழா ஆண்டு. எனவே இந்தப் போட்டியில் தமிழக வாலிபால் ஆட்டக்காரர்கள் முதல் தடவையாகத் தேசிய சாம்பியன் விருதைப் பெற்றது வெள்ளி விழாக் கொண்டாட்டத்தின் மகிழ்ச்சியைப் பன்மடங்காக்கியுள்ளது.

✖ மற்றொரு வெள்ளி விழாப் பரிசு இங்கு முதல் தடவையாக நடைபெற்ற சிறுவர்களுக்கான 'மினி' தேசிய வாலிபால் போட்டியில் தமிழகத்துக்குக் கிடைத்துள்ளது. தஞ்சையைச் சேர்ந்த ரவியின் (படத்தில் சிவந்தி ஆதித்தனின் கரம் குலுக்குபவர்) ஆட்டச் சிறப்பு இந்த 'மினி' தேசியப் போட்டியில் மிளிர்ந்தது.

✖ விளையாட்டுக்கு இரட்டை யோகம். அட்டைப் படத்தில் திருச்சி பாரத் ஹெவி எலெக்ட்ரிகல்ஸ் தொழிலகத்தில் நடைபெற்ற தேசிய வாலிபால் பந்தயக் காட்சியையும் செஸ் ஆடும் ஒரு பெண்மணியையும் காணலாம். வண்ணப் படங்கள்: முறையே ஆர். பி. எஸ். மணி, உத்ரா.



தமிழ்நாட்டில்தான் தேசிய செஸ் சாம்பியன் இளைஞர் ரவி சேகர் இருக்கிறார். செஸ்ஸில் முன்னாள் தேசிய சாம்பியன் ஆரனின் சாதனையைக் கண்டு மூக்கின் மேல் விரலை வைத்தோம், அல்லவா?

---

மாகிக் கொண்டு சக்தியோடு பலன் தர ஆரம்பிக்கிறது. இப்படிப் பரோபகாரமும் ஆத்மாபிவிருத்தியும் ஒன்றுக்கொன்று பலம் தந்து கொண்டு வளர்கின்றன.

என்ன சொன்னாலும் வெளி உலகத்தை நாம் முழுக்கச் சரி பண்ணுவது நம் கையில் இல்லை. பல பேர் பல இனுசான கர்மாவால் கஷ்டப்படும்போது நாம் எத்தனை சேவை செய்தாலும், அவர்கள் கர்மா குறுக்கே நின்று வெளியிலே பலன் இல்லாமலும் போகலாம். ஆனால் பிடிவாதமாக நாம் இந்தக் காரியத்தைச் செய்து கொண்டே வந்தால், அது நிச்சயமாக நம் கர்மாவைக் கழுவத்தான் செய்கிறது; கர்ம வாஸனையால் ஏற்பட்ட நம் உள் அழுக்குகளை அலம்பத்தான் செய்கிறது. இதனால்தான் திருவள்ளுவர் வெளியில் உன் தொண்டு பலன் தந்ததா என்று 'Proof' (நிரூபணம்) தேடாதே, உன் மனஸிலே அழுக்கு போச்சா, மனத்துக்கண் மாசிலன் ஆனாயா என்று பார்த்துக் கொள்: இந்த உள் 'Proof' — இதையாரும் நம்மிடமிருந்து ஒளிக்க முடியாது — கிடைத்துவிட்டால் நீ பண்ணின தர்மம், அறன் பலித்து விட்டது என்று அர்த்தம் என்று சொல்கிற மாதிரி குறளைப் பண்ணியிருக்கிறார்.

(தொடரும்)

ராஜாஜி சிந்தனை

## இளைஞர் இலக்கியம்

மதம், இதிகாசம் ஆகியவற்றுக்கு அடுத்தபடியாக மக்களிடம் உயர்குணங்களை வளர்ப்பது வீரம், தியாகம், விடாமுயற்சி ஆகியவற்றை வர்ணிக்கும் இலக்கியங்களே. ஸ்காட், ஸ்டீவன்ஸன், ஹாகார்ட் போன்றோரின் உயர்ந்த இலக்கியங்களுக்குப் பதிலாகத் தற்காலக் கதைகளை இளைஞர்கள் படிப்பதுபற்றி அதிகமாகச் சந்தோஷப்பட முடியாது. யதார்த்த நோக்கில் அமைந்த கதைகளுக்கு மதிப்புண்டு. ஆனால் உணர்ச்சி போதனைக்கு யதார்த்தப் போக்கினால் பயனில்லை. இளைஞர்கள் நாம் அன்றாட வாழ்வில் அதிகமாகக் காண முடியாத வீரம், விடாமுயற்சி ஆகியவை பற்றிப் படித்து ஊட்டம் பெற வேண்டும். சமூகத்தில் துரதிர்ஷ்டவசமாக நிலவுகிற யதார்த்த அம்சங்களைப் பற்றிப் படித்து உணர்ந்து படிப்பினை பெறப் பின்னால் நேரம் இருக்கிறது. அதற்குரிய பயனும் கிட்டும். ஆனால் இவை நலன்பயக்கும் திசையில் இளம் உள்ளங்களின் உணர்ச்சிகளை வளர்க்கவோ குணங்களை உருவாக்கவோ உதவாதவை. நாம் நமது இளைஞர்களுக்குச் சாகசக் கதைகளைப் படிக்கத் தரவேண்டும். ஆபத்தை அஞ்சாது எதிர்கொள்வது, பலவீனர்களுக்காகப் போராடுவது, பெண் இனத்தைத் தூஷணையிலிருந்தும் துன்பத்திலிருந்தும் காப்பதுபோன்ற சம்பவங்கள் அடங்கிய வீர சாகசக் கதைகளைத் தர வேண்டும்.

— ஆக்ரா பல்கலைக்கழகப் பட்டமளிப்பு விழா பிரசங்கத்தில் ஒரு பகுதி.

# மோதி நூல் தையல் வேலைப் போட்டி

முதற் பரிசு ரூ. 10,000/-

ரூ. 50,000 பெறத்தக்க, வேறு விந்தை மிக்க பரிசுகள்

2 இரண்டாவது பரிசுகள்



4 மூன்றாவது பரிசுகள்



8 நான்காவது பரிசுகள்



10 ஐந்தாவது பரிசுகள்



100 ஆறுதல் பரிசுகள்



சற்றே சிந்தியுங்கள்! ரூ.10,000! இவ்வளவு பணத்திலும் என்னதான் செய்ய முடியாது! வாரியிறைத்து செலவு செய்யலாம், சேமிக்கவும் செய்யலாம். இத்தொகை உங்களுக்கே கிடைக்கக்கூடும். ஆகவே தாமதமின்றி இன்றே உங்கள் தையல் வேலையைத் துவக்குங்கள்.

நீங்கள் செய்ய வேண்டியது :-



**MODITHREAD NEEDLEWORK CONTEST**
Modi Thread Mills, Modinagar, U.P.

விரையுங்கள்! முடிவு தேதி : ஆகஸ்ட் 30, 1976

அனுப்ப வேண்டிய விலாசம் : **MODITHREAD NEEDLEWORK CONTEST**
Modi Thread Mills, Modinagar, U.P.

# மோதி நூல்கள்

30க்கு மேற்பட்ட நாடுகளில் விற்பனையாகிறது.

# பாலுஸேரி பெனிபிட் சிட் பண்டு
## பிரைவேட் லிமிடெட்

தலைமை அலுவலகம் & பதிவு செய்யப்பட்ட அலுவலகம்
''பாலுஸேரி பில்டிங்ஸ்''. 3, சிங்காராச்சாரி தெரு,
திருவல்லிக்கேணி, சென்னை – 600 005
தந்தி: 'EVERMANS'. போன்: 841194 & 843938. தபால் பெட்டி; 414

### நீண்டகாலச் சிட்டுகள்

50 மாதங்கள் — 50 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|
| LTN | ரூ. 100/- | ரூ. 5,000/- |
| LTO | ரூ. 50/- | ரூ. 2,500/- |
| LTP | ரூ. 20/- | ரூ. 1,000/- |

40 மாதங்கள் — 40 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|
| LTA | ரூ. 500/- | ரூ. 20,000/- |
| LTB | ரூ. 250/- | ரூ. 10,000/- |
| LTC | ரூ. 125/- | ரூ. 5,000/- |

### குறுகியகாலச் சிட்டுகள்

20 மாதங்கள் — 20 அங்கத்தினர்கள்

மாதம் ரூ. 30/- முதல் ரூ. 500/- வரை சந்தா

25 மாதங்கள் — 25 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|---|---|---|
| A | ரூ. 200/- | ரூ. 5,000/- | D | ரூ. 25/- | ரூ. 625/- |
| B | ரூ. 100/- | ரூ. 2,500/- | E | ரூ. 20/- | ரூ. 500/- |
| C | ரூ. 50/- | ரூ. 1,250/- | F | ரூ. 15/- | ரூ. 375/- |

சேரும் குரூப்பை விவரித்து எழுதவும்

கிளைகள் : புது டில்லி - பம்பாய் - பெங்களூர் - கல்கத்தா - கோயமுத்தூர்

ஸ்தாபிதம் : 1947

50 YEARS

எங்கள் சேவை உங்களுக்குத்தேவை



பாவம் குட்டி ! பொத்தான்கள் இல்லாத சட்டை இரு பக்கமும் பறக்கிறது.

அதோ தேவேந்திரன் பந்தைக் கையால் பிடித்து நிறுத்துகிறான். 'ஃபவுல் ஃபவுல்' என்று பொற்செழியன் கத்துகிறான்; அணியில் சற்றுப் பெரியவன்!

''போடா ! என் பந்து !'' என்று கத்து கிறான் தேவேந்திரன்.

3

இது அசல் கால் பந்து. ஆடுபவர்கள் படிக்கும் இளைஞர்கள்! அல்லது தொழிற்சாலை யில் வேலை பார்ப்பவர்கள்.

# வட்டார வீரர்கள்!

பெரம்பூர் ரயில் நிலையத்துக்குத் தெற்கே ஒரு மைதானம் ! இப்பகுதிக்கு ஏகாங்கிபுரம் என்று பெயர்.

பந்து சிறிய ரப்பர் பந்துதான் ! அதை உதைக்கும் கால்களும் பிஞ்சுக் கால்கள்தாம்.

குடிசைவாழ் குழந்தைகளுக்குக் குஷி கிளம்பிவிட்டது.

அணி என்று சமமாகப் பிரித்துக் கொள்ளாமலேயே அடிக்கும் பந்தைத் தடுக்க அரை டிராயர் வாண்டுகள் ஆர்வத்துடன் ஓடுகிறார்கள். பந்தைத் துரத்திக் கொண்டு அதே நேரத்தில் அவிழ்ந்து நழுவும் டிராயரை யும் ஒரு கையில் பிடித்துக் கொண்டு மோகன் ராஜ் முன்னேறுகிறான்.





வேலை கிடைக்காமல் தவிப்பவர்களும் உண்டு. ஆனாலும் ஆளுக்கு மாதம் ஐம்பது பைசாப் போட்டு, பந்துக்குப் பஞ்சர் ஒட்டி, மாலை நேரத்தில் உற்சாகமாக ஆடும் கோஷ்டி. இதற்கு 'யங் சாலஞ்சர்ஸ் புட்பால் கிளப்' என்ற பேரும் உண்டு. வசதிக் குறைவை 'சாலஞ்ச்' செய்கிறார்கள்.

1. ஏகாங்கிபுரம் ஜூனியர் அணி
2. யங் சாலஞ்சர்ஸ்
3. மணற்பரப்பில் 'பழம் பிரி' ஆட்டம்
4. தாக்கர்சத்திரம் கபாடி ஆட்டம்





பன்னீர் செல்வம் 'டைம்' செய்து ஒரு பலத்த 'கிக்' கொடுக்கிறார். மின்னல் வேகத்தில் பாய்கிற வேலன், பந்தை நிறுத்தி அடுத்த கிக் கொடுக்கிறார் !

கோல் ! கோல் !

இரண்டு பாறைக் கற்களுக்கு நடுவே பந்து புகுந்து ஓடுகிறது. அதுதான் கோல் ! கம்பு இல்லை! வலை இல்லை. கவலையே இல்லை ! ஒரே மகிழ்ச்சி ஆரவாரம்தான் !

3

தாக்கர்சத்திரம்.

கபாடி கபாடி கபாடி.... ஒலி கேட்கிறதா ? இதோ ஜெயசந்திரன் பாய்ந்து வருகிறார், பாருங்கள் !

'வாழைக்காய்ப் பொரியலு! வாடா மச்சான் சாப்பிடலாம்! வாழைக்காய்ப்பொரியலு! வாடா மச்சான் சாப்பிடலாம்'ன்னு ஜபம் பண்ணுகிறாப் போல மூச்சு விடாமல் முனகுவது கேட்கிறதா? தம் பிடிப்பதில் இது ஒரு ஸ்டைல் !

ஜயசந்திரன் பாவலா காட்டுகிறார் !

கடைசியில் மச்சான் சுந்தரம், சாப்பிட்டே விடுகிறார் ! ஜெயசந்திரன் மாட்டிக் கொண்டார் ! அவுட் !

4

அதோ ! பூப்பந்தாட்டம் நடக்கிறது ! பால் பாட்மிண்டன்! அயனாவரம் அன்பர்கள் தெரு ஓரமாகக் கிடைத்த இடத்தில் வலையைக் கட்டி ஆடுகிறார்கள் !

''எல்லோரையும் நேசியுங்கள்!'' என்று உபதேசம் செய்து கொண்டே ஆட்டக்காரர் கிரிஸ்டோபர் பந்தைப் பரிமாறுகிறார்.

அதாவது 'லவ் ஆல்' என்று அர்த்தம் ! எதிர்ப்புறத்தில் பந்து அடிக்கப்பட்டு ஒழுங்காகத் திரும்பி வருகிறது. கிரிஸ்டோபர் அதைத் தூக்கலாகத் திருப்பி அனுப்புகிறார். அதைக் கோட்டுக்குள் விழவொட்டாமல் வாயு பகவான் ஒரு தள்ளுத்தள்ளிஅவுட்ஆக்குகிறார்.

புளூஸ்டார் பாட்மிண்டன் கிளப் உறுப்பினர்கள் இதற்கெல்லாமா அஞ்சுவார்கள் ? மாதம் இரண்டு ரூபாய் சந்தாவாயிற்றே !

இப்போது சக்கரவர்த்தி தொடர்ந்து பந்தை மறுபக்கம் அனுப்புகிறார்!

5

மரீனா கிரிக்கெட் மைதானம்.

நடு மைதானத்தில் பார்வையை ஓட்ட வேண்டாம் ! அங்கே கன்றுக்குட்டி புல் மேய்ந்து கொண்டிருக்கிறது.

இதோ, பெவிலியனை ஒட்டிய மரத்தடியைக் கவனியுங்கள் !

வேகமாகப் பந்து வீசுகிறாரே ! அவர் மேற்கிந்தியத் தீவு ஜூலியன் இல்லை !

நம்ப சுப்பிரமணி....!

பந்தை வீசிவிட்டு ஸ்டைலாகப் பார்க்கிறார். 'ஷார்ட்லெக்' மலர்மன்னன் கால்களை மடக்கித் தயாராக நிற்கிறான். 'மிட் ஆப' கலையரசனுக்கு, பந்து தன் பக்கம் வராது என்று தைரியம் !

'ஹௌஸ் இஸ் தட்?' என்று கத்த சுப்பிரமணிக்குத் தெரியாது. ஆனாலும் 'அவுட்' என்று கத்துகிறான். அவனேதான் அம்பயர் ! பாட்ஸ்மன் ரவி பந்தைத் தொடவேயில்லை. அவனுக்குப் பத்தடி தூரம் தள்ளிப் பந்து சுவரில் மோதி நிற்கிறது.

''எப்படிடா அவுட் ?''

''நீதான் சுவத்திலே பட்டா 'அவுட்' என்று சொன்னியே !''

''இந்த மூணு கரிக்கோடு மேல் படணும்!''

இதற்குள் சட்டை இல்லாத ஆறுமுகம் பந்தைத் தூக்கிக் கொண்டு 'பௌல்'பண்ணத் தயாராகிறான். பாட்ஸ்மனும் மாறுகிறான்.

மாநிலக் கல்லூரி மார்க்கர் வருகிறார்.

'' பையன்களுக்கு ரொம்ப உற்சாகம் சார் ! எல்லாரும் கால்வாய்க்கு அப்பாலே இருக்கிறவங்க ! கையிலே அகப்பட்ட பலகையை யெல்லாம் தூக்கிக்கிட்டு வந்து பாட் பண்ணுவாங்க ! நல்லாவும் பண்ணுவாங்க '' என்கிறார்.

'டொக்' என்று அந்தக் கட்டைப் பந்து காமெண்டேடர் பாக்ஸிற்குள் வந்து விழுகிறது. அதாவது என் மேலே வந்து விழுகிறது.

பாட்ஸ்மன் செல்வராஜ் என்னைப் பார்த்து விழிக்கிறான் ! நான் அவனைப் பார்த்து உற்சாகத்துடன் சிரிக்கிறேன்.

6

மரீனா மணற் பரப்புக்குப் போவோம்.

சும்மா உட்கார்ந்து காற்று வாங்க அல்ல ! சுறுசுறுப்பாக ஓடி ஆடி, **'பழம் பிரி'** ஆட்டம் ஆடும் மீனவச் சிறுவர்களைக் கவனிக்க !

அதோ, நிற்பவர்கள், நாகலிங்கம், அன்புமணி, தவமணி, வரதன்! எதிரே நிற்பவர்கள் ஜெகதீசன், கங்கா, சந்திரன், ஸ்ரீதர்.

இந்தப் பக்கம் ஏழு கோடுகள்.

முதல் நான்கு பேரும் காவல்காரர்கள்.

கங்கா முதல் கோட்டண்டை வந்து நிற்கிறான். அவனைத் தாண்டவிடாமல் மடுக்கப் பார்க்கிறான் நாகலிங்கம். இதற்கு ரூல்கள் உண்டு. தடுப்பைத் தவிர்த்து ஏழாவது கோட்டுக்கு வந்துவிட்டால் பழம் ! இதோ, ஜெகதீசன் மூன்றாவது கோட்டைத் தாண்டி விட்டான் ! ''அட, இங்கேயா இருக்கீங்க?''

ஒரு பெண்ணின் கட்டைக்குரல் ஒலிக்கிறது. ஜெகதீசன் இதுவரை அடைந்த வெற்றியை மறந்து நீர்ப்பரப்பைப் பார்த்து ஓடுகிறான்.

கோஷ்டி கலைகிறது. வேகமாக ! பழம்பிரி ஆடியவர்களை ஓர் அதட்டல் பிரித்துவிட்டது!

—நேர்முக வர்ணனை : கோமதி ஸ்வாமிநாதன்



**ஜாக்கி மேரி !**

அவளுக்குக் குழந்தை பிறந்த தினம் 'ஜாக்கி' மேரி ஐந்து குதிரைகளை ஓட்ட வேண்டிய நாள் ! மூன்றாவது குதிரையை ரேஸில் ஓட்டிவிட்டு ஆஸ்பத்திரிக்குச் சென்று பிரசவித்தார் ! 'ரொம்பவும் துணிச்சல்காரி' என்ற பட்டம் பெற்றவள். இவளுக்குப் பல தடவை பயங்கரக் காயங்கள் குதிரைப் பந்தயத்தில் ஏற்பட்டுள்ளன. ஆனால் குதிரை மீதுள்ள ஆசையும், குதிரைப் பந்தய வெறியும் சிறிதும் குறையவில்லை. - பு. எஸ். ஐ. எஸ்.



அமரர் **கல்கி**

அத்தியாயம் 11

## சிலிர்ப்பும் சினமும்

ஞாயிற்றுக்கிழமை முழுவதும் சமூக சேவா சங்கக் கட்டடம் திமிலோகப் பட்டது. ஒத்திகை நடந்த நேரம் பாதி. அரட்டையிலும் தமாஷ் பேச்சிலும் கழிந்த நேரம் பாதி. பவானி தங்களுடன் வந்து சகஜமாகப் பழகி நாடகத்திலும் நடிக்க ஒப்புக் கொண்டதில் அனைவருக்கும் ஒரே ஆனந்தம். பதினெட்டு மணி நேரம் இருந்த இடத்தை விட்டு நகராமல், சீட்டாடி 'ரிகார்டு' ஏற் படுத்தியிருந்த பத்மனாபன் கூடச் சீட்டாட் டத்தைச் சற்று மறந்து நாடக ஒத்திகையைப் பார்க்க வந்து விட்டாரென்றால் அதற்குப் பவானியின் தோற்றத்திலும் சுபாவத்திலும் இருந்த வசீகர சக்திதான் காரணம். அந்தச் சங்கத்தின் அங்கத்தினர் ஒவ்வொருவரும் ஏதோ தேவேந்திர பதவி கிடைத்துவிட்டது போல் மகிழ்ந்து கொண்டிருக்க, கோவர்த் தனன் மட்டும் இருக்கிற பதவியையும் இழந்து விட்டவர் போல் முகத்தைத் தூக்கிக் கொண்டு உட்கார்ந்திருந்தார்.

அந்தப் பக்கமாகப் போன ஒரு வழக் கறிஞரை அழைத்து, "என்ன மிஸ்டர் சேஷாசலம்! என்னமோ நாடகமாமே? நல்ல தங்காள் கதையா? அரிச்சந்திரன் வரலாறு?" என்று கேட்டார்.

"சே! அதெல்லாம் பழம் காலம்ணு! இப்பல்லாம் சமூகக் கதைதான் எடுக்கும்" என்றார் சேஷாசலம்.

"ஓகோ! காதலித்த கமலாசினியைக் கல்யாணம் பண்ணிக் கொள்ள முடியாத கதாநாயகன் ஒப்பாரி பாட்டுப் பாடியபடியே தற்கொலை செய்து கொண்டு செத்துப் போகி றானா?" என்றார் ஏளனமாக, கோவர்த்தனன்.

மாஜிஸ்திரேட்டின் மனநிலையை அவரது கேலித் தோரணையிலிருந்து புரிந்து கொண்டு விட்ட சேஷாசலம், அவர் போக்கிலேயே பேசி நல்ல பெயர் தட்டிக் கொள்ளப் பார்த்தார்.

"அப்படி ஏதாவது நவீனக் காதல் கதை யாக இருந்தாலும் தேவலாமே. இவர்கள் காந்தி பக்தர்களோல்லியோ? அதனால் சமூக சேவை பற்றிய இலட்சிய நாடகம் போடு கிறார்கள்."

"பலே, பலே! சமூக சேவையா? விதவை களுக்கெல்லாம் பொட்டு வைத்து விபசாரி களுக்கெல்லாம் பூச்சூட்டி அழகு பார்க்கப் போகிறானா கல்யாணம்?"

"ஊஹும்! அப்படி ஏதாவது இருந்தாலும் தேவலாம். நாடகத்தைப் பார்க்க அரு வருப்பா யிராது. இங்கே ஆளுக்கொரு துடைப்பக் கட்டையைத் தூக்கிக் கொண்டு கூத்தடிக்கிறா!"

"அதென்ன கண்றாவி?"

"ராமப்பட்டணம் போன்ற ஒரு சிறு பட் டணத்தில் படித்த வாலிபர்கள் பலர் இருக் கிறார்கள். எல்லோரும் வேலை நேரம் போகப் பாக்கியை வெட்டிப் பொழுதாய்ப் போக்கு கிறார்கள். சீட்டாட்டம், சில்லறைப் பேச்சு. இந்தச் சமயம் கல்கத்தாவிலிருந்து ஒரு பெண் வருகிறாள். அந்தப் பட்டணத்தில் குடியேறுகிறாள். அவள் மாலை நேரத்தில் ஊரில் உள்ள ஏழைக் குழந்தைகளை அழைத்து வைத்துக் கொண்டு படிப்பு, பாட்டு, டான்ஸ், தையல் வேலை என்று சொல்லித் தருகிறாள். இதைப் பார்த்த அந்த ஊர் வாலிபர்களிடம் மனமாற்றம் உண்டாகிறது. அவர்களும் உபயோகமாக ஏதும் செய்ய நினைக்கிறார்கள். ஊர் சுத்தமாகிறது. குளம் ஒன்று வெட்டி யாகிறது. சேரிக் குழந்தைகளுக்குப் பள்ளிக் கூடம் ஒன்று கட்டுகிறார்கள்..."

"இது என்ன பிதற்றல்? வாழ்க்கைக்கு ஒத்து வராத கதை?"

"வாழ்க்கையில்தான் சமூக சேவை என் றால் உடம்பு வணங்கவில்லை. நாடகத்தி லாவது செய்து பார்த்து விடுவோமே என் பதால் இருக்கும்!" என்று கூறி சேஷாசலம் பெரிதாகச் சிரித்தார்.

''போட்டீரே ஒரு போடு!'' என்று கூறிய படி கோவர்த்தனன் அவர் முதுகில் ஒரு போடு போட்டதும் அவருக்கு அந்தக் கடும் வெய்யிலிலும் உச்சி குளிர்ந்து விட்டது.

அன்று மாலை பவானி ஒத்திகை முடிந்து புறப்பட்டபோது, டென்னிஸ் மட்டையை விர்ரென்று சுற்றிக் கொண்டு அவளெதிரே நின்றார் கோவர்த்தனன். ''என்ன ஒத்திகை ஒரு வழியாக முடிந்ததா? ஒரு ஸெட் ஆடுவோமா?''

''இல்லே ஸார், ரொம்ப 'டயர்ட்' '' என்று கூறியபடியே பவானி கைக்குட்டையால் முகத்தை ஒற்றிக் கொண்டாள். ''நாளைக் காலே வேணுமானால் சந்திப்போம்.''

''ஆல்ரைட்'' என்றார் கோவர்த்தனன். ''சீக்கிரம் வீட்டுக்குப் போய் ஓய்வெடுத்துக் கொள். கார் தயாராக இருக்கிறது. போவோமா?''

''வேண்டாம், வேண்டாம். எனக்காக நீங்கள் அவசரப்பட்டுக் கிளம்புவானேன்? இருந்து டென்னிஸ் ஆடிவிட்டு வாருங்கள். கல்யாணம் என்னைப் போகும் வழியில் வீட்டில் இறக்கி விடுவார்'' என்றாள் பவானி.

கோவர்த்தனன் தாம் ஆட விரும்பவில்லை என்று கூற முடியாதவராக அவ்விருவரும் இணை சேர்ந்து நடப்பதைப் பார்த்துச் சிற்றப் பெருமூச்சு விட்டபடி நின்றார்.

காரில் போகும்போது, ''சுத்த ஃபிராட்'' என்றான் கல்யாணம்.

''யாரை இத்தனை நல்ல வார்த்தை கூறி வாழ்த்துகிறீர்கள்?'' என்றாள் பவானி.

''எல்லாம் இந்த மாஜிஸ்திரேட்டைத்தான்.''

''ஏன், அவருக்கென்ன? மிஸ்டர் கல்யாணம், நீங்கள் அவரை மதிக்காவிட்டாலும் அவர் பதவிக்கு மதிப்புத்தர மறுக்கக்கூடாது'' என்றாள் பவானி.

''சரி, உன்னதமான, மதிப்புக்குரிய, அரிய பெரிய, உயர் பதவியில் அமர்ந்திருக்கும் ஃபிராட் கோவர்த்தனன்! — போதுமா?''

பவானி சிரித்தாள். ''என்ன கோபம் அவர்மீது உங்களுக்கு?''

''சொன்னால் நம்புவது கூடக் கஷ்டமாயிருக்கும். ஆனால் நான் சொல்வது நூற்றுக்கு நூறு உண்மை. அந்த மனுஷன் உங்களை விலைக்கு வாங்கி விட்டதாகவே நினைக்கிறார். அவருடன் மட்டும்தான் நீங்கள் பேசிப் பழகலாம், விளையாடலாம். வேறு யாருடனும் தொடர்பு வைத்துக் கொள்ளக் கூடாது என்று எண்ணுகிறார். உங்களை நாடகத்தில் கதாநாயகியாகப் போட்டதற்காக என்னைக் கத்தியைக் காட்டி மிரட்டவே செய்தார்!''

''இஸ் இட்? நிஜமாகவா?''

''ஆமாம். ஆனால் நான் அதை லட்சியம் பண்ணவே இல்லே. அவருக்குப் பயப்படவும் இல்லே. அவர் அதிகாரம் எல்லாம் கோர்ட் வரைதான். வெளியே வந்தால் அவர் மாஜிஸ்திரேட் இல்லே. கோவர்த்தனன்.''

''அதெல்லாம் சரி, ஒப்புக் கொள்கிறேன். என்றாலும் அவர் என்னிடம் ரொம்ப அக்கறை எடுத்துக் கொண்டிருக்கிறார் என்கிறீர்களே! அதுவும் உங்களுடன் நான் நெருங்கிப் பழகினால் பொறாமைப்படும் அளவுக்கு! ஐ ஆம் த்ரில்ட்!''

அவள் சிரிப்பு அவன் சினத்தைத் தூண்டியது. ''வண்டியைத் திருப்பட்டுமா?'' என்றான் கல்யாணம் கோபமாக.

''எதற்கு?''

''பாவம்! அவருடன் டென்னிஸ் ஆடாமல் வந்து விட்டீர்களே!''

''ஆமாம், பாவம்!'' என்றாள் பவானி. கூடவே, ''பரவாயில்லே, இன்றைய ஏமாற்றத்தின் நினைவோடு நாளை விளையாடும் போது அவர் இரட்டிப்பு மகிழ்ச்சி அடைவார்'' என்றாள்.

கல்யாணம் பொங்கிய கோபத்தைக் கார் மீது காட்டினான். அது தன் சக்தியையெல்லாம் திரட்டிக் கொண்டு அதிகபட்ச வேகத்தில் பாய்ந்தது.

''மெதுவாகவே ஓட்டுங்கள், குப்பைத் தொட்டியைக் கண்டால் உங்கள் காருக்குக் காதல் பிறந்து விடுகிறது'' என்று பவானி கூறியதை அவன் காதில் விழுந்ததாகக் காட்டிக் கொள்ளவே யில்லே.

## அத்தியாயம் 12

# யாரை நம்புவது?

பவானியை அவள் வீட்டில் இறக்கிவிட்ட கல்யாணம், நேரே தன் இல்லத்துக்குத் திரும்ப மனம் இல்லாமல் மாசிலாமணி குடும்பம் இறங்கியிருந்த ஜாகைக்குப் போனான்.

ரங்கநாத முதலியாரின் அந்தப் பழைய வீட்டில் கமலா சுவரில் ஆணி அடிக்க முயன்று கொண்டிருந்தாள். விசுவம் சில படங்களை வைத்துக் கொண்டு நின்றான்.

கல்யாணத்தைப் பார்த்ததும் சற்று பயந்து போன விசு, ''பாருங்கள் மாமா! ஆணி அடிக்கக் கூடாது என்று இந்த வீட்டுக்காரர் சொன்னாரில்லேயா? அக்கா கேட்கவே மாட்டேனென்கிறாள்'' என்றான்.

''ஒன்றிரண்டு ஆணிகள் அடித்தால் பாதகமில்லே. அவர் வந்து கேட்டால் என்பேரில் பழியைப் போடு. நான்தான் ஆணி அடித்ததாகச் சொல்லிவிடு!''

''பொய்யா சொல்லச் சொல்கிறீர்கள்?''

''வேண்டாம். அதையே நிஜமாக்கிவிட்டால் போச்சு'' என்றான் கல்யாணம்.

''நல்ல காரியம். நீங்களே ஆணி அடித்து விடுங்கள். அக்கா அப்பவே பிடித்து ஆணி அடிக்கிறாள், அடிக்கிறாள், இன்னும் ஒரு ஆணிகூட அடித்தபாடில்லே.''

''இங்கே வா. உன் முதுகிலே நாலு அடி அடிக்கிறேன்'' என்றாள் கமலா.

கல்யாணம் அவளிடமிருந்து சுத்தியையும் ஆணிகளையும் வாங்கிக் கொண்டான். ''உன்னால் முடியாது, நான் அடித்துத் தருகிறேன்''

என்றான். ஸ்டூல் மீது ஏறி, ''இதோ பார்த்தீர்களா? இப்படிப் பிடித்துக் கொண்டு இப்படி அடிக்க வேண்டும்'' என்று கூறிய படியே அடிக்க ஆரம்பித்தான்.

பிறகு ஒவ்வொரு முறை அடிக்கும்போதும், 'இது மாஜிஸ்திரேட் பதவிக்கு விழும் அடி. இது அவருடைய மேனாட்டு மோகத்துக்கு விழும் அடி. இது அவர் பொறுமை மீது விழும் அடி. இது அவர் காதல் மீது விழும் அடி' என்று மனசுக்குள் கூறிக் கொண்டே போடு போடென்று போட்டான். கடைசியில், 'இது அவர் தலைமீதே விழும் பலத்த அடி' என்று எண்ணியவாறு சுத்தியை வீசியபோது அது ஆணியைத் தாக்காமல், அவன் விரலை நன்றாகப் பதம் பார்த்து விட்டது.

கல்யாணம் 'ஆ' வென்று அலறியபடி கையை உதறினான்.

''ஐயோ! விரலில் ரத்தம்'' என்றான் விசு.

கல்யாணம் பல்லைக் கடித்தபடி வலியைப் பொறுத்துக் கொண்டு ''பாதகமில்லை. வீடு போய்ச் சேர்ந்து மருந்து போட்டுக்கொள்கிறேன். இப்போதைக்கு ஒரு வெள்ளைத் துணி இருந்தால் தண்ணீரில் நனைத்துக் கட்டலாம்'' என்றான்.

கதிகலங்கிப் பிரமித்துப் போய் நின்ற கமலா சுய நினைவு பெற்றவளாக நடுங்கும் குரலில் ''இதோ கொண்டு வருகிறேன்'' என்று கூறி ஓடிச் சென்று தனக்குப் பிடித்தமான பூப்போட்ட கைக்குட்டை ஒன்றை நனைத்து எடுத்து வந்தாள்.

''இங்கே கொடுங்கள். நானே கட்டிக் கொள்கிறேன்'' என்றான் கல்யாணம்.

''இல்லை. ஒற்றைக் கையால் கட்டிக் கொள்ள வராது. நானே கட்டி விடுகிறேன்'' என்றாள் கமலா.





இத்தனையும் நீங்கள் ஓட்டப் பந்தயத்தில் வாங்கிய பரிசுகளா?

ஆமாம். பரிசு பெற்றுக் கொண்டவர்களிடமிருந்து தட்டிப் பறித்துக் கொண்டு ஓடி வந்து சேர்த்தவை.

—எஸ்.வி.

---

அவள் கட்டுப் போட்டபோது தன்னைத் தானே கட்டுப்படுத்திக் கொள்ள முடியாமல் அவனை ஒருமுறை ஏறிட்டுப் பார்த்தாள். கல்யாணமும் பரிவு மேலோங்க அவளைக் குனிந்து நோக்கினான்.

அந்தக் கண்களை அதிக நேரம் உரையாட அனுமதியாமல், விகலம், "அழகாய்த்தானிருக்கிறது. காயம் பட்டது இடது கை, அக்கா வலது கையைப் பிடித்துக் கொண்டு கட்டுப் போடுகிறாளே" என்றான்.

"அடேடே! நான்கூடக் கவனிக்கவில்லை" என்றான் கல்யாணம்.

கமலா வெட்கமடைந்து நாணியவளாக, அதே சமயம் இன்னொரு கரத்தையும் பற்ற வாய்ப்புக் கிடைத்ததில் மகிழ்ந்தவளாக, நிஜமாகவே காயம் பட்டிருந்த இடத்தில் கட்டுப் போட்டாள்.

இதையெல்லாம் அவள் பெற்றோர் சமையலறைக் கதவு ஓரமாக நின்று பார்த்து ரசித்துக் கொண்டிருந்தனர்.

மாசிலாமணி கனைத்துக் கொண்டே வந்து, "அடடா, மாப்பிள்ளை கையிலே என்ன?" என்றார், ஒன்றும் அறியாதவர் போல.

"அதற்குள் அவரை மாப்பிள்ளையாக்கி விட்டீர்களா? நன்றாயிருக்கிறதே" என்றாள் காமாட்சி அம்மாள்.

"அடேடே தவறிச் சொல்லி விட்டேன்."

"பரவாயில்லை. நெருப்பு என்றால் வாய் வெந்துவிடுமா?" என்றான் கல்யாணம்.

"அதற்கில்லை தம்பி; இந்தப் பெண்ணுக்கோ கல்யாண வயதாகி விட்டது. இந்தக் காலத்தில் பெண்களை அதிக நாட்கள் கல்யாணம் இல்லாமல் வைத்துக் கொள்ளக் கூடாது. இந்த வருஷமே எப்படியும் கல்யாணம் செய்துவிட நினைத்தோம். அதற்குள் இந்தப் "பாழும் ஜப்பான் யுத்தம் வந்து எங்களை ஊரை விட்டே கிளப்பிவிட்டது."

"அதனால் என்ன? கமலாவுக்கு மாப்பிள்ளை அகப்படுவதுதானா கஷ்டம்? அவளுடைய குணத்துக்கும் புத்திசாலித்தனத்துக்கும்..."

"அழகுக்கும்" என்று விகலா எடுத்துக் கொடுத்தாள். கல்யாணம் தொடர்ந்து: "...எத்தனையோ பேர் நான் நான் என்று போட்டி போட்டுக் கொண்டு வருவார்கள். உங்களுக்குக் கவலையே வேண்டாம். கமலாவுக்கு நல்ல வரனைப் பார்த்துக் கல்யாணம் செய்து வைப்பது என் பொறுப்பு."

கமலா அவனைப் பார்த்த பார்வையில் கோபம் மேலோங்கியிருந்ததா? துயரம் பொங்கி வந்ததா என்று கூற முடியாது. ஆனால் ஓரிரு கணங்களே நீடித்த அந்தப் பார்வை கல்யாணத்தின் அந்தராத்மாவையே ஊடுருவி ஒரு குலுக்குக் குலுக்கி விட்டதென்னவோ உண்மை. அவள் 'விருட்'டென்று திரும்பி உள்ளே சென்றாள்.

"கல்யாணப் பேச்செடுத்தாலே இந்தப் பெண்ணுக்கு ஒரே சங்கோஜம்" என்று காமாட்சி கூறியது கல்யாணத்துக்கு ஏதோ கனவில் கேட்பது போலிருந்தது.

மறுநாள் காலை பவானி டென்னிஸ் உடையில் மாஜிஸ்திரேட்டைச் சந்தித்தபோது மிகுந்த உற்சாகத்துடன் இருந்தாள். "என்ன சரித்திரக் கதைகளில் வருகிற கதாநாயகன் மாதிரி எனக்காக வாளேந்திப் போரிடவே ஆரம்பித்து விட்டீர்களாமே?" என்றாள்.

"என்ன சொல்கிறாய்நீ?" என்று கோவர்த்தனன் ஒன்றும் தெரியாதவர் போல் வினவினார்.

கல்யாணம் கூறியதை யெல்லாம் பவானி விவரித்ததும், "அடப் பாவமே! அந்தத் தறுதலை அப்படியா சொன்னான்? பெரிய கில்லாடிதான்!" என்றார்.

"சே! அவரை அப்படி யெல்லாம் ஏசாதீர்கள்" என்றாள் பவானி.

"பின்னே கதையை அப்படியே தலைகீழாக மாற்றிவிட்டால் என்ன அர்த்தம்? பவானி! அவன் நேற்று மாலை என்னிடம் வந்து என்ன சொன்னான் தெரியுமா? நீ தவறாக எடுத்துக் கொள்ள மாட்டாய் என்றால் சொல்கிறேன்."

"பாதகமில்லை சொல்லுங்கள்."

"அவனுக்கு உன்மீது காதலாம். ஆனால் நீயோ என்மீது உயிரையே வைத்திருக்கிறாயாம். அதனால் அவனை லட்சியம் பண்ணவே மாட்டேன் என்கிறாயாம். ஆக, அவன் கண்களுக்கு நான் பெரிய வில்லனாகக் காட்சியளிக்கிறேன்!"

"அழகுதான்!" என்று கூறிச் சிரித்தாள் பவானி. "அப்புறம்?"

"இவன் அப்பாவுக்கு இங்கே பக்கத்தில் உள்ள ஏலமலையில் ஹரிமகிரி எஸ்டேட் என்று இருக்கிறது. அங்கே வேலை செய்கிற ஆட்களை விட்டு என் கையைக் காலை முறித்துப் போட்டு விடப் போவதாக மிரட்டினான்!"

"ஐயைய்யோ!"

"எனவேதான் கத்தியை உருவிக் காட்டியும், துப்பாக்கி லைசென்ஸ்கூட இருப்பதாகக் கூறியும் அவனை நான் பயமுறுத்தி வைக்க வேண்டியதாயிற்று" என்றார் கோவர்த்தனன்.

"சேச்சே! அவ்வளவு மோசமானவரா கல்யாணம்? பார்த்தால் சாது போல் இருக்கிறாரே?"

"அவன் வெறும் பயந்தாங்குளிதான்... ஆனால் பணத் திமிர் படைத்தவன். காசை விட்டெறிந்தால் அடியாட்கள் பக்க பலமாக நிற்பார்கள் என்ற தைரியம்" என்றார் கோவர்த்தனன்.

பவானி அங்கு வந்தபோது அவளுக்கிருந்த உற்சாகம் இதற்குள் இருந்த இடம் தெரியாமல் மறைந்து போயிருந்தது. மிகச் சுலபமாக அவள் டென்னிஸில் கோவர்த்தனனிடம் தோற்றுப் போனாள். **(தொடரும்)**

# போற்குவியல் நிதியை

## அடைந்திட அழைக்கிறது

## தஞ்சாவூர்
## பர்மனேண்ட் பாங்க்



அதிக வட்டியை தரும்
பொற்குவியல்
திட்டத்தில்
குறைந்த பட்ச
முதலீடு ரூ 600/–ம்
குறைந்த பட்ச கால அளவு
62 மாதங்களுக்கும்
பெற்றுக் கொள்ளப்படும்.

THE TANJORE PERMANENT BANK LTD.
ESTD. 1901

| பெருகும் துகை | | | | |
|---|---|---|---|---|
| டிபாசிட் துகை | 62 மாதங்களில் | 121 மாதங்களில் | 181 மாதங்களில் | 241 மாதங்களில் |
| 600 | 1.005 - 00 | 1,650 - 00 | 2,751 - 30 | 4,517 - 00 |
| 1,200 | 2,010 - 00 | 3,300 - 00 | 5,502 - 60 | 9,034 - 00 |
| 3,000 | 5,025 - 00 | 8,250 - 00 | 13,756 - 50 | 22,585 - 00 |
| 6,000 | 10,050 - 00 | 16,500 - 00 | 27,513 - C0 | 45,170 - 00 |

முழு விபரங்களுக்கு தமிழக மெங்கும் உள்ள
எங்கள் 89 கிளைகளில் ஏதேனும் ஒன்றுடன்
தொடர்பு கொள்ள வேண்டுகிறோம்.

## தஞ்சாவூர் பர்மனேண்ட் பாங்க் லிட்.

பதிவு அலுவலகம் —— தஞ்சாவூர் 613001

R. சொக்கப்பா —— B. K. மாதவன்

காரியதரிசி. சேர்மன்

# உலகத் தரத்துக்கு உயர்வோம்

எம்.ஏ.எம்.ராமசாமி



மாண்ட்ரியால் ப்ரீ ஒலிம்பிக் ஹாக்கிப் பந்தயம்

**தொழில் அதிபர் திரு எம். ஏ. எம். ராமசாமி இந்திய ஹாக்கி பெடரேஷனின் தலைவர். டென்னிஸ், ஷட்டில் பாட்மிண்டன், கால்ப் போன்ற மற்ற விளையாட்டுக் கழகங்களிலும் அங்கம் வகிப்பவர் 'மாண்ட்ரியால் ஒலிம்பிக்'கில் ஹாக்கி விளையாட்டுச் சிறப்பினை நேரில் காணச் செல்கிறார். இந்திய விளையாட்டுக்களின் வளர்ச்சிக்கு அவரது ஆலோசனைகள் கவனிக்கத் தக்கவை.**

இந்தக் காலத்தில் பெற்றோர்களும், குழந்தைகளும்படிப்பில் காட்டும்சிரத்தையைஉடல் பயிற்சிகளிலும், விளையாட்டுக்களிலும் செலுத்தக் காணோம் என்பது எனதுமுடிவானகருத்து.

இந்தத் தருணத்தில் உடலும் மனமும் இணைந்து செயலாற்ற வேண்டிய அவசியத்தை வற்புறுத்துகிறேன். நோயுற்ற உடலில் அறிவு அவ்வளவு சிறப்பாக இயங்காது; இன்னும் ஒரு படி மேலே சென்று பார்த்தோமானால் தேகாரோக்கியம் உள்ள வனப்புள்ள உடல்தான் மேதாவிலாசத்தைத் தோற்றுவிக்க முடியும் என்று கூறலாம்.

நமது மத்திய சர்க்கார் விளையாட்டுக் கலைகளை நிர்வகிக்கும் பொறுப்பை கல்வி, சமூக நலன் அமைச்சரவையிடம் ஒப்படைத்திருக்கிறது. இந்த இலாகாவினர் விசேஷ மான்யங்களைத் தேசம் முழுவதிலும் உள்ள எல்லா வகை விளையாட்டுக் கலைகளுக்கும் அவை முன்னேறவும், வளரவும் வழங்கி வருகிறார்கள். ஒவ்வொரு ராஜ்யத்திலும் ஒவ்வொரு வகை விளையாட்டுக்கும் தனித் தனி விளையாட்டுக் கழகங்கள் உள்ளன. இவை அந்தந்த ராஜ்யத்தில் உள்ள தலைசிறந்த விளையாட்டு வீரர்களின் நலனைப் பேணுவதோடு, புதிய விளையாட்டுத் திலகங்களைக் கண்டுபிடித்து அவர்களுக்கு விசேஷப் பயிற்சியும் தருகின்றன.

இந்த ராஜ்ய விளையாட்டுக் கழகங்கள் தேசிய பெடரேஷன்களோடு இணைந்தவை. இந்தத் தேசிய பெடரேஷன்களே நமது தேசிய விளையாட்டுக் கோஷ்டிகளைத் தேர்ந்தெடுத்து அவற்றுக்குச் சர்வதேசத் தரத்தின்படி விசேஷப் பயிற்சி அளிக்கின்றன; நுணுக்கங்களைக் கற்றுத் தருகின்றன.

கல்லூரிகளும், பள்ளிகளும் விளையாட்டுப் பயிற்சியைக் கட்டாய பாடமாகவே ஆக்கியுள்ளன. இந்திய அரசு விளையாட்டுக் கலைகளுக்கு மிகுந்த முக்கியத்துவம் அளிக்கிறது. இந்தச் சூழலில் இன்றைய இளைஞர்கள் படிப்பைப் போலவே விளையாட்டுக் கலைகளிலும் கவனம் செலுத்த வேண்டும் என்று விரும்புகிறேன். தரம் வாய்ந்த விளையாட்டு வீரனாகவும் விளங்கும் ஒரு பட்டதாரி வாழ்க்கையில் முன்னுக்கு வருவதற்கான சாத்தியக்கூறுகள் அதிகம் உள்ளன. அதுவும் தேசியத் தரம் வாய்ந்த விளையாட்டு வீரனாயிருப்பின் அவனுக்கு ஊக்கப் பரிசுகளும் சர்வதேச விளையாட்டுக்களில் கலந்து கொள்ள விசேஷப் பயிற்சிகளும் கிடைக்கின்றன. உலக நாடுகள் பலவற்றுக்கு விஜயம் செய்யும் வாய்ப்புக்கள் ஏற்படுகின்றன.

மத்திய சர்க்காரின் கல்வி, சமூக நலன் அமைச்சரவை தேசிய விளையாட்டு பெடரேஷன்களுக்குத் தாராளமாகப் பொருளுதவி செய்ய வேண்டும் என்று கோருகிறேன். அப்போதுதான், அவை நமது விளையாட்டு வீரர்களுக்குச் சர்வதேசத் தரமுள்ள விளையாட்டுக் கருவிகளை வாங்கித் தந்து, அவற்றில் அவர்கள் பயிற்சி பெற உதவ முடியும். சர்வதேசப் பந்தயங்களுக்கு நமது வீரர்களை அனுப்பவும் சர்வதேச விளையாட்டு வீரர்களை இங்கே அழைத்து வரவும் முடியும். இதன் மூலம் நம் தேசிய விளையாட்டுக் கலைஞர்கள் சர்வதேசத் தரத்தில் விளையாட்டு நுணுக்கங்களை விரைவில் கற்றுக் கொள்ளுவார்கள்.

ஓர் உதாரணம் வேண்டுமானால்: இந்திய ஹாக்கிக் குழுவினர் மாண்ட்ரியால் ஒலிம்பிக்கில் செயற்கை மைதானத்தில் ஆட வேண்டியுள்ளது. இந்த மாதிரியான புதிய செயற்கை மைதானங்களில் ஆடிப் பழக்கமில்லாததால் இந்திய ஹாக்கி பெடரேஷன், நம் இந்திய ஹாக்கிக் குழுவினருக்கு ஒலிம்பிக் போட்டி ஆரம்பிப்பதற்கு முன்னால் பிரான்சிலும், டோரன்டோவிலும் வேண்டிய அளவு பயிற்சி செயற்கை மைதானத்தில் பெற வசதி செய்திருக்கிறது. மத்திய சர்க்கார் கல்வி அமைச்சகம் இந்தப் பயிற்சிக்குத் தேவையான விசேஷ மான்யங்களை வழங்க முன்வரவேண்டும். இல்லாவிடில் நம் உலகஹாக்கி சாம்பியன்களுக்கு மாண்ட்ரியால் ஒலிம்பிக்கில் அதுவே ஒரு பலவீனமாக ஆகி விடக்கூடும்.

இந்தியாவில் விளையாட்டுக் கலைகளின் எதிர்கால வளர்ச்சிக்கும் முன்னேற்றத்துக்கும் மத்திய சர்க்காரின் கல்வி, சமூக நல அமைச்சரவையும், அகில இந்திய விளையாட்டுக் கவுன்சிலும், தேசிய விளையாட்டு பெடரேஷன்களும் ஒத்துழைத்துத் தலைசிறந்த தேசிய விளையாட்டு வீரர்களையும், வீராங்கனைகளையும் தேர்ந்தெடுத்துப் பயிற்சியளிக்க வேண்டும். உலகத் தரம் அடைவதற்கு வேண்டிய சகல வசதிகளையும் நம் தேசிய விளையாட்டு வீரர்களுக்கும், வீராங்கனைகளுக்கும் அளிக்க வேண்டும்.

# குவாலியர் ரேயானின் மகத்தான 26 ஆண்டு காலப் பணி

Sobhagya GR 74-2-Tam.



## தன்வலிமை பெறும் கனவை நனவாக்கி வரும் பணி.

ரேயான் துணிகள், ஸ்டேபிள் இழை, ரேயான்-கிரேடு பல்ப் (கூழ்), ரேயான் ஸ்டேபிள் நூலிழைத் தொழிற்சாலைகளுக்கான எந்திர சாதனங்கள் ஆகிய எல்லாவற்றையும் நம் நாட்டிலேயே உற்பத்தி செய்து கொள்வதற்கென குவாலியர் ரேயான் செய்துவரும் முயற்சிகள், நாடு சுதந்திரம் எய்திய காலிலேயே தொடங்கிவிட்டன.

மூங்கில் மற்றும் இதர கெட்டி மரங்களிலிருந்து கரை திறனுள்ள ரேயான்-ரகக் கூழ் தயாரிப்பு, மற்றும் ரேயான், பல்ப், இவை சார்ந்த தொழிற்சாலைகள் ஆகியவற்றுக்கான நுட்பநவீனமான எந்திர சாதனங்களின் உற்பத்தி முதலியவற்றிலே குவாலியர் ரேயான் முன்னோடியாக விளங்குவதனால், ரேயான் தொழிலிலே நம் நாடு தன்வலிமை பெற வழியமைந்துள்ளது.

இன்று, குவாலியர் ரேயானின் ஸ்டேபிள் நூலிழை உற்பத்தியளவு, 520 லட்சம் பேருக்கு ஆடை வழங்கப் போதுமானதாக உள்ளது. மரக் கூழ் உற்பத்தியோ, ஆண்டு தோறும் ஒரு லட்சம் டன்களுக்கு மேல்; இது செல்லுலோஸ் இழையளவிலே கணக்கிட்டால், 5.2 லட்சம் பருத்தி பேல்களுக்கு ஈடாகும்.

கடந்த பத்தாண்டுகளில், குவாலியர் ரேயான் நம் நாட்டின் பொக்கிஷத்திற்கு, வரிகளும் தீர்வைகளுமாக ரூ. 90 கோடி செலுத்தியுள்ளதோடு, அதே காலத்தில் ரூ. 360 கோடி அந்நியச் செலாவணியை மிச்சப்படுத்தியுள்ளது; இதை நோக்கும்போது, தன்வலிமை வாய்ந்த பொருளாதார அமைப்புக்கு குவாலியர் ரேயான் செலுத்திவரும் மகத்தான பணியின் பெருமை தெளிவாக விளங்கும்.

## குவாலியர் ரேயான்—

**தேச முன்னேற்றமே முதன்மை எனக் கருதுவோர்.**

தி குவாலியர் ரேயான் ஸில்க் மானுபாக் (வீவிங்.) கோ. லிட்., பிர்லாகிராம், நாக்தா (ம.பி.)

### அத்தியாயம் 5

## அக்கினி அறியப்படுவது

நாராயண நம்பூதிரி கூடுபட்ட புலி போல் குறுக்கும் நெடுக்குமாக நடந்து கொண்டிருந்தார்.

ஒரு புறமும், மறுபுறமுமாக அவர் திரும்பித் திரும்பி நடந்தபோது, ''ஸ்ரீலஸ்ரீ தம்பிரான் சுவாமிகளுக்கு வணக்கம்'' என்ற குரல் பின்புறமிருந்து வந்தது.

சங்கீதம் இழைவது போன்ற அந்த இனிமையான குரல் கேட்டு நின்ற நிலையிலேயே ராஜ கம்பீரமாகத் தலையைத் திருப்பிப் பார்த்தார் நாராயண நம்பூதிரி.

அங்கே வெள்ளைக் கலையுடுத்தி, வெள்ளைப் பணி பூண்டு, தெள்ளு தமிழால் திருக்கோலம் போட்டது போல், பிள்ளை முகம் பால் வடியப் பேரழகு இசை பாட, கன்னங் கருங் கூந்தல் கால்வரையில் தெண்டனிட அன்னம்போல் நின்றாள் அழகு மயில் ஒருத்தி.

மன்னர் குலமகளோ, வண்ணக் கலைமகளோ, செல்வத் திருமகளோ, சிங்காரப் பூமகளோ — கண்ணைப் பறித்த அந்தக் கட்டழகிலும் அன்னை வடிவையே கண்டார் நம்பூதிரி.

அடைபட்ட கதவு, தடைப்பட்ட வாசல்; அங்கேயும் காவல்காரர்கள். எப்படி வந்தாள் இந்தப் பெண்?

தன்னை மறந்த நிலையில், ''தாயே! யார் நீங்கள்?'' என்றார் நம்பூதிரி.

'' நான் வேதத்தின் எழுத்துக்கள், நாதத்தின் ஸ்வரங்கள். என் பெயர் உன் இதயத்தில் இருக்கிறது!'' என்றாள் அவள்.




''கட்டுக் காவல் கடந்து, இங்கே நுழைந்தது எப்படி?'' என்றார் நம்பூதிரி;

''நான் வெள்ளத்தால் அழியாதவள், வெந்தணலால் வேகாதவள்; கள்ளர்க்கு அரிதானவள்; காவலையும் கடந்து நிற்பவள்'' என்றாள் அவள்.

''இந்த நம்பூதிரி ஒரு நைஷ்டிக பிரம்மச்சாரி. நள்ளிரவில் நீங்கள் இங்கே



வந்தது கள்ளமற்றதாயிருப்பினும் உள்ளங்கெட்டோரின் ஒருசொல்லுக்கு நான் ஆளாக நேரிடும். வந்த காரணம் கூறி விடை பெறலாமா?'' என்றார் நம்பூதிரி.

''நம்பூதிரிகள் தர்மத்தின் காவலர்கள். தர்மம் ஊர்ப் பழிக்கு அஞ்சலாமா?'' என்றாள் அவள்.

''என் வரையில் நானும், உங்கள் வரையில் நீங்களும் உத்தமர்களே. தம் வரையில் தர்மம் அறிந்தவர்கள் சமூகத்தில் எத்தனை பேர்?'' என்றார் அவர்.

''அவர்கள் அரைக் குடங்கள்; இன்னும் சிலர் வெறும் குடங்கள்; நீயோ நிறைகுடம்; நீதியின் உறைவிடம்; தாயும் மகனும் சந்திக்கும்போது வதந்திக்கு ஏது இடம்?'' என்றாள் அவள்.

''நல்லது தாயே! சொல்வதைச் சொல்லி விடுங்கள்'' என்றார் நம்பூதிரி.

''தர்மம் மயக்க மருந்து தரப்பட்டுத் தூங்கிக் கொண்டிருக்கிறது. நீயும் தூங்கிக் கொண்டிருந்தால் என்ன கதி?''

''காவலனே கைதியாகிக் கிடக்கும் போது தர்மத்தை எப்படி எழுப்புவது?''

''அணுக்கள்தோறும் சாஸ்திரங்கள் இழையோடிக் கொண்டிருக்கும் பிரம்ம ரத்தத்தை யாரும் கைதியாக்க முடியாது. பரசுராமனின் கோடரி உன் பார்வையிலேயே இருக்கிறது. உன் கைகளில் உனக்குத் தெரியாமலேயே அக்கினி எரிந்து கொண்டிருக்கிறது. உனது வாக்குகள் தீப்பிழம்புகளால் உருவாக்கப்பட்டவை. ஆதி நாயகனோடு இரண்டறக் கலந்து விட்டவன், அவனில் பாதி நாயகனாகி விடுகிறான். சக்தி உன்னிடம் இருக்கிறது. அதை நீ அறியாமல் இருப்பதே அனுதாபத்துக்குரியது.''

''என் சக்தியை நான் அறிவேன் தாயே, என் சக்தியை நான் அறிவேன். ராஜ விசுவாசத்தில் என் சக்தி பீறிட்டெழுகிறது. கதவுகள் தாழிடப்பட்டிருக்கின்றன. கையறு நிலையில் நான் கலங்கி நிற்கிறேன்.''

''இதோ பார். இந்தக் கதவுகள் — இவை மரத்தால் செய்யப்பட்டவை. இதன் காவலர்கள் வெறும் ஜடங்கள். ''கதவு திறக்கட்டும்'' என்று நீ ஆணையிட்டால் திறக்கும். ''காவல் கூட்டம் பறக்கட்டும்'' என்றால் பறக்கும். அந்தப் பதவியை ஆதிநாயகன் உனக்கு அருளியிருக்கிறான். பதவி, பூர்வ புண்ணியாலும் என்பது நீ அறியாததா?''

''நான் எல்லாம் அறிவேன்; ஆனால் ஏதும் அறியேன். வல்லவன் நான்; இன்று வலிமை இல்லாதவன். என்னை என்ன செய்யச் சொல்கிறீர்கள் தாயே!''

''இது மதி மயக்கத்தின் முரண்பாடு. வெளி இருட்டை நீக்க விளக்குண்டு. மன இருளை நீக்க மதியே விளக்கு. சத்தியத்தின் மீது ஆணையிட்டு இந்தக் கதவை உடைத்தெறி. தர்மத்தைக் காக்கவே தன்னலம் துறந்த குலசேகரன் சலனத்தில் தவிக்கிறான். மார்த்தாண்ட வர்மன் வழி அறியாது திகைக்கிறான். கண்ணியில் விழுந்த பச்சைக் கிளியாய் மெல்லிளங் கோதை கலங்குகிறாள். இங்கே மகுடாபிஷேகத்துக்கு நாள் குறித்தாகிவிட்டது. சூழ்ச்சியும் சூதுமே வலிமையாகிவிடுமானால், இத்தனை ஆலயங்களுக்குத் தேவை என்ன?''

அந்தப் பொன் மயில் பேசப் பேச, நம்பூதிரியின் தேகம் கொதித்தது.

இரண்டு கைகளையும் ஓங்கிச் சுவரில் அடித்தார்.

''அம்மா! என்னைச் சோதிக்காதீர்கள்'' என்று சத்தமிட்டார்.

''அங்கங்களைச் சித்திரவதை செய்து கொள்வது கேள்விகளுக்குப் பதிலாகாது'' என்றாள், அந்தப் பொன் மயில்.

''சிங்கம் கூண்டுக்குள் அல்லவா இருக்கிறது!'' என்று கர்ஜித்தார் நம்பூதிரி.

''கூண்டும் தனக்குக் கட்டுப்பட்டதே என்பதைச் சிங்கம் அறியாமல் இருக்கிறதே!'' என்றாள் அவள்.

''மக்கள் அனைவரும் அயோக்கியர்களையே நம்புகிறார்களே! நான் என்ன செய்ய?'' என்று கதறினார் நம்பூதிரி.

''மக்கள் அப்படித்தான் இருப்பார்கள். இல்லை; அப்படியேதான் படைக்கப்பட்டிருக்கிறார்கள். அதனால்தான் அவர்களுக்கு வழிகாட்ட ஞானிகள் தேவைப்படுகிறார்கள்!'' என்றாள் அவள்.

''மக்களின் குரலே மகேசனின் குரல் என்கிறானே ரவிவர்மன்....?'' என்றார் நம்பூதிரி.

''அவன், மக்களால் படைக்கப்பட்ட மகேசனைச் சொல்கிறான்; மக்களைப் படைத்த மகேசனையல்ல. இறைவனின் குரல் கோடியில் ஒருவரின் காதுகளில் மட்டுமே ஒலிக்கும். கூர்ந்து கேள். உன் காதுகளில் அது ஒலிக்கிறதா இல்லையா?''

''நான் தனியாக வாளெடுத்துச் சமர்க்களம் செல்லவா?''

''சமர் என்று வரும்போது அதுவும் தேவைதான். ஆனால், சிருஷ்டியில் கரங்கள் மட்டுமே வலிவுடையவை அல்ல. கரத்தையும், சிரத்தையும் எது ஆட்டி வைக்கிறதோ, அந்த அறிவும் வலியதே!''

''நீங்கள் சொல்வது எனக்கு விளங்கவில்லை.''

''இப்படி நீ சொல்வது முதல் தடவை என்று கருதுகிறேன்.''

''எனது வேத ஞானம் உங்களிடம் தோற்றுப் போனதை வெட்கமின்றி ஒப்புக் கொள்கிறேன், தாயே!''

''நல்லது. அக்கினியில் பிறந்த பிரம்ம ரத்தம் இப்போது பேசட்டும். எங்கே, கதவு திறக்கட்டும் என்று சொல்!''

அவள் இப்படிச் சொன்னதும், ''கதவு திறக்கட்டும்'' என்று சத்தமிட்டார் நம்பூதிரி.

அடைப்பான்கள் உடைந்தன; கதவுகள் திறந்தன.



"காவலர்கள் உறங்கட்டும் என்று சொல்!" என்றாள் அவள்.

நம்பூதிரி சொன்னார்; எழுந்து நின்ற காவலர்கள் உறங்கி விழுந்தார்கள்.

"இப்போது புரிகிறதா! நீ எது சொன்னாலும் நடக்கும். சத்தியத்தின் தலைவாசல் காவலன் நீ. அரண்மனையைக் கொளுத்தவும் உன்னால் முடியும். வஞ்சியைப் பொசுக்கவும் உன்னால் இயலும். நீ நினைத்தால் மதுரை நகரம் மறுபடியும் எரியும். பொங்கும் கனலில் கொங்கு நாடும் அழியும். சக்தி பெரிதல்ல; அதை உணர்ந்து கொள்வதே பெரிது" என்றாள் அவள்.

நம்பூதிரி துடிதுடித்து நின்றார். இரண்டு கைகளையும் தோள் வரையில் தூக்கி உதறினார். மார்பை அகட்டி ஒரு மற்போர் வீரனைப் போல் நடந்தார்.

"வஞ்சகருக்குப் புத்தி புகட்டுவேன். வஞ்சியை மீண்டும் வசப்படுத்துவேன். மார்த்தாண்டவர்மனுக்கே மகுடத்தை அளிப்பேன். இவை நடக்கவில்லை என்றால், வஞ்சி நகரத்தையே இடுகாடாக்குவேன்" என்று, ஓங்கிச் சிரித்தார்.

இடி இடித்ததைப் போன்ற அந்தச் சிரிப்பைக் கேட்டு, அடுத்த கட்டில் படுத்திருந்த கேசவ நம்பூதிரியும், ஜகந்நாத நம்பூதிரியும் எழுந்து ஓடி வந்தார்கள்.

நம்பூதிரி சிரித்துக் கொண்டேயிருந்தார். அவர்கள், "சுவாமி! சுவாமி!" என்று பதறினார்கள்.

"தாயே! தாயே!" என்று கூவினார் நம்பூதிரி.

சுற்றுமுற்றும் பார்த்தார்; யாரையும் காணவில்லை.

கேசவ நம்பூதிரியின் தோள்களைப் பிடித்து உலுக்கி, "என் தாய் எங்கே? எங்கே?" என்றார்.

"உங்கள் தாய் இறந்து முப்பது ஆண்டுகள் ஆகின்றனவே சுவாமி!" என்றார் அவர்.

"இப்போது நாங்கள் பேசிக்கொண்டிருந்தது உங்கள் காதில் விழவில்லையா?" என்றார் நம்பூதிரி.

"இல்லையே, சுவாமி!" என்றார் ஜகந்நாத நம்பூதிரி.

அமைதியாக நின்று, நிதானித்துக் கதவுகளைப் பார்த்தார் நம்பூதிரி. அவை தாழிடப்பட்டே யிருந்தன.

## அத்தியாயம் 6

# பகவதி கீதை

"நாம் எப்படிப் பகவதி அம்மன் கோயிலுக்கு வந்தோம்" என்பதே புரியாமல், கோயிலுக்குள்ளே நுழைந்தான் ரவிவர்மன்.

மங்கிய அகல் விளக்கு வெளிச்சத்தில் அவன் கண்களுக்கு இரண்டு முகங்கள் தெரிந்தன.

ஒன்று, பகவதி அம்மன் திருமுகம்; இன்னொன்று, சூலாயுதத்தில் பாய்ந்து கிடந்த ராமவர்மனின் முகம்.

பகவதி அம்மன் ருத்ர தாண்டவம் ஆடுவதுபோல் அவன் கண்களுக்குத் தெரிந்தது.

"தர்மத்தைக் காட்டுக்கு அனுப்பிய சண்டாளனே! உனக்குப் புத்தி புகட்டவே இங்கு அழைத்து வந்தேன். உத்தமர்கள் அவதரித்த சேரமான் பெருங்குடியில் அதமனாக, அநியாயக்காரனாகப் பிறந்தவன் நீ! நமது சம்பிரதாயங்களின் பகைவன் நீ! வஞ்சியின் மகுடம் உன் தலையில் ஏறு முன்னாலே, சேரமான் பரம்பரைக்கு நியாயம் வழங்கப்படும்! அதுவும் உன் கண் முன்னாலேயே வழங்கப்படும்!"

பேசுவது பகவதி அம்மன்தானா?

ரவிவர்மனுக்கு அப்படித்தான் தோன்றிற்று.

உடனே 'ஓ'வென்று ஒரு சிரிப்புச் சத்தம் கேட்டது.

ரவிவர்மன் திரும்பிப் பார்த்தான்.

சூலத்தில் தொங்கியபடியே ராமவர்மன் பேசினான்:

"ஆசை நிறைவேறி விட்டதா? அரண்மனை கைக்கு வந்துவிட்டதா? ஆள், அம்பு, பரிவாரம், யானை, சேனை எல்லாம் உன் கையிலா? கேரள சிங்க வளநாடாகிய வஞ்சிமாபுரத்து மாவேந்தரே, மகுடாபிஷேகத்துக்கு நாள் குறித்தாகிவிட்டதா? அரசிளங்குமரன் மார்த்தாண்ட வர்மன் வனத்திலே துடிக்கிறானா? உங்கள் ஆனந்தநர்த்தனம் உற்சாகமாக நடக்கிறதா?..."

ரவிவர்மன் உடல் நடுங்கிற்று.

ராமவர்மன் சூலத்தில் இருந்தபடியே தன் உடலை ஒரு சுழற்றுச் சுழற்றினான். அவன் உடலில் இருந்து ரத்தம் பீறிட்டு, ரவிவர்மன் முகத்தில் அடித்தது.

"இந்த ரத்தத்தில் என்ன வாசனை வருகிறது? சேரமான் வீட்டு உப்பு வாசனை வருகிறதா? அது செஞ்சோற்றுக் கடனை உங்கள் முகத்தில் எழுதுகிறதா? நன்றி கொன்ற பாதகர் உடம்பில் ரத்தம் ஓடாது; கழுநீர்

## வேலை அளித்தவர் பென்ஷன் கொடுக்காவிட்டால் பரவாயில்லை. நீங்களே அதற்கு ஏற்பாடு செய்து கொள்ளுங்கள்.



# விஜயா பென்ஷன் திட்டம்

### அதற்கு கைகொடுக்கும்- மிக எளிதானது.

**பிறந்த நாள் போனஸ்**

டிபாசிட்டு காலத்தில் உங்களுடைய ஒவ்வொரு பிறந்த நாளிலும் எங்கள் வாழ்த்துக்களுடன் உங்களுக்கு, ஒரு பரிசுப் பொருள் அனுப்பப்படும்.

மாதாமாதம் ரூ. 100 வீதம் 144 மாதங்களுக்கு பணம் கட்டுங்கள். இக்கால முடிவில் உங்களுக்கு கீழ்கண்ட பலன்கள் கிடைக்கும்.

- **மொத்தமாக ரூ. 14,400:** நீங்கள் எங்களிடம் முதலீடு செய்த மொத்த பணம்.
- **வாழ்நாள் முழுதும் பென்ஷன்:** நீங்கள் ஜீவித்திருக்கும் காலம் வரை ஒவ்வொரு மாதமும் ரூ. 100/- பெறுவீர்கள்.
- நீங்கள்பென்ஷன் பெறுவதை எத்தருணத்திலும் நிறுத்திவிட நிச்சயித்தால் அத்தருணம் இத்திட்டத்தின் "விதிமுறைகளின்" படி **மொத்தமாக மறுபடியும் ரூ.12,000/-உங்களுக்குக் கொடுக்கப்படும்.**

இத்திட்டத்தின் கீழ் நீங்கள் எந்த வயதிலும் சேர்ந்து சேமிக்க ஆரம்பிக்கலாம். விஜயா பாங்கின் 400 கிளை அலுவலகங்களில் ஒன்றை இன்றே அணுகி முழு விவரங்களையும் தெரிந்துகொள்ளுங்கள்.

## விஜயா பாங்க் லிமிடெட்

ரிஜிஸ்டர்டு ஆபீஸ்: லைட் ஹவுஸ் ஹில் ரோடு, மங்களூர்-575003.
அட்மினிஸ்ட்ரேடிவ் ஆபீஸ்: 2, ரெசிடென்சி ரோடு, பெங்களூர்-560025.

சேர்மன்: எம். சுந்தர் ராம் ஷெட்டி

OBM 3252/1 TM

## நாங்கள் காட்டும் அத்தாட்சி இதோ:




## இதோ நீங்கள் காட்டும் அத்தாட்சி:




# ஸிக்னல் ஃப்ளூரைடு ஒன்றுதான் பற்சிதைவையும் வாய் நாற்றத்தையும் தடுத்துநிறுத்திக் காட்டுகிறது

## ஒப்பற்ற பல்சுத்திகரிப்பு மூலப் பொருளின் அடிப்படையிலே.

**பற்சிதைவை நிறுத்துகிறது ஸிக்னலில் உள்ள ஃப்ளூரைடு**

ஜெர்மனியிலே பல்டாக்டர்கள் கின்கல், ஸ்டோல்டே...400 குழந்தைகளைக் கொண்டு பரிசோதனைகள் நடத்தி நிரூபித்தனர்: பற்சிதைவை 33 சத விகிதம் குறைத்தது ஸிக்னல் ஃப்ளூரைடு (ஆதாரம்: DAS DEUTSCHE ZAHNARZTEBLATT, 1968, 9, 445 460). எப்படி நிரூபித்தது ஸிக்னலின் ஃப்ளூரைடு? பல்எனாமலோடு அது ஒருங்கிணைகிறது; பற்கள் அரித்துப் போகவும், முடிவில் சிதைவுபடவும் முக்கிய காரணமான அமிலத் தாக்குதலை வலுவாக எதிர்த்து நிற்கிறது. ஸிக்னல் தேய்க்கும் சிறுவர்கள் பல்வலி என்றால் இன்னதென்றே அறியார். உங்கள் குடும்பத்தினருக்கும் இதுவன்றோ நற்காப்பு: ஸிக்னல் சிகிச்சையே முற்காப்பு.

**வாய்நாற்றத்தை நிறுத்துகிறது ஸிக்னல் உள்ள எஸ்-14**

அமெரிக்காவிலே டாக்டர் ஹாவர்டு E. விண்டு மருத்துவ பரிசோதனைகள் நடத்தி நிரூபித்தார்: துலக்கிய 15 நிமிடங்களில் வாய்நாற்றக் கிருமிகளிலே 95 சத விகிதத்தை ஒழித்துக் கட்டியது ஸிக்னலின் எஸ்-14. 10 மணி நேரம் ஆனபின்னரும் வாய்நாற்றம் 75 சத விகிதம் குறைந்திருந்தது (ஆதாரம்: U.S.A., நார்த் வெஸ்டர்ன் யூனிவர்ஸிட்டி அறிக்கை 23 அக் 1968)

**ஸிக்னலுக்கே உரிய சுத்திகரிப்பு மூலப் பொருளால் பற்களுக்கு மருத்துவப் பரிசுத்தம்**

ஸிக்னலின் ஒப்பிலா மூலப் பொருளான அலுமினியம் டிரைஹைட்ரேட், பல் டாக்டரே துலக்கித் தந்தது போல தூய்மை அளிக்கிறது, பல் எனாமலைப் பாதிக்காமலே (ஆதாரம்: ரிஸர்ச் ரிவியூ 7 நவ 1969, வெளியிட்டோர் U.R. லெபாரட்டரீஸ், நுல்வொர்த், U.K.) ஒப்பில்லாச் சுத்திகரிப்பு மூலப் பொருளிலே ஃப்ளூரைடு, எஸ்-14--இம் மும்மணிகளும் இணையுமிடம்; ஸிக்னல் ஒன்றுதான் இன்னொரு பற்பசை இவ்வளவு செய்யாது.




**அத்தாட்சி காட்டுவது**

**ஸிக்னல் ஃப்ளூரைடு ஒன்றே—**
**கேளுங்களேன் பல் டாக்டரை.**

லிண்டாஸ்-SGF 63-140 TM

ஓடும்! நான் சேரமான் வீட்டு நாய்க் குட்டி. வஞ்சிமாபுரத்து வேந்தரே, அமர்வதற்கு இடம் தேவை என்றால் அரண்மனைதானா கிடைத்தது? இந்த அம்மன் கோயில் விசாலமாக இருக்கிறதே! வேணாட்டு பத்மநாப சுவாமி கோயிலில் வேண்டிய இடம் இருக்கிறதே! இரண்டும் தேவையில்லை என்றால், மேற்கு கடலலை கரையேறிக் கரையேறி உம்மை அழைக்கிறதே! சூழ்ச்சியால் பதவி பெற்றவன் அதைக் கண்ணீரோடு ஒரு நாள் இழக்க வேண்டியிருக்கும். ஆட்சியைத் தவறாக அடைந்தவன் வீழ்ச்சிக்கும் தயாராக இருக்க வேண்டும். அரசர் பெருமானே! உங்கள் அந்தரங்கங்கள் அரங்கேறும் நாள் வெகு தூரத்தில் இல்லை. சந்திரசூரியர் காலம் வரை உங்கள் தலைமுறை வஞ்சியை ஆளப் போகிறது என்று கனவு கண்டீர்கள். ஒரு நாள் சகலமும் அற்றுச் சந்ததியும் அற்று நீங்கள் வெளியேற வேண்டியிருக்கலாம். என்ன, ஏழை நாய்க்குட்டி இவ்வளவு குரைக்கிறது என்று எண்ணுகிறீர்களா! இது, இருப்பவன் பேசினால் வெறும் பேச்சு. ஆனால் இப்போது நீங்கள் கேட்பது இறந்தவனின் ஆன்மா பேசும் பேச்சு. ஆன்மா பொய் பேசாது. புறப்படுங்கள். உங்களுக்குத் துணையாக அன்னை பகவதியின் சூலம் கூடவே வந்துகொண்டிருக்கும்'' என்று ஓங்கிச் சிரித்தது ராமவர்மனின் சடலம். உடனே படாரென்று தலை தொங்கிற்று.

ரவிவர்மன் வியர்க்க விறுவிறுக்கத் தட்டுத் தடுமாறிப் படிக்கட்டுகளில் ஏறினான். சூலம் முதுகில் குத்தி வெளியே தள்ளுவதைப் போல் தோன்றிற்று.

'' ஐயோ! அம்மா, அம்மா!'' என்று அலறினான் ரவிவர்மன்.

'' என்ன? என்ன?'' என்று திடுக்கிட்டு எழுந்து அவன் அருகில் அமர்ந்தாள் யூஜியானா.

''நான் எங்கிருக்கிறேன்?'' என்று கேட்டான் ரவிவர்மன்.

'' என் வீட்டில்தான்!''

''எப்படி வந்தேன்?''

''சிறிது நேரத்துக்கு முன்பு பிரமை பிடித்த மாதிரி வந்தீர்கள். நான்தான் கதவைத் திறந்தேன். ஒன்றும் பேசாமல் உள்ளே நுழைந்து படுக்கையில் படுத்தீர்கள்'' என்றாள் யூஜியானா.

வியர்த்திருந்த அவனது முகத்தை அவள் துடைத்துவிட்டாள்.

அவன் மீண்டும் கட்டிலில் சாய்ந்தான்; அவள், அவன் மார்பில் சாய்ந்தாள்.

## அத்தியாயம் 7

# பகலில் இரவு

''எனக்குப் பயமாக இருக்கிறது. என்னைக் கொண்டு போய் ஆசிரமத்தில் விட்டு விடு'' என்று, கெஞ்சினாள் கோதை.

''பயப்படாதே! சிலரது ரத்தத்தின் மேலேதான் தர்மம் உருவாக முடியும் என்பதற்கு அடையாளமே இந்தச் சிவப்பு வெளிச்சம். என்ன வேட்டுவப் பெண் தர்மத்தைப் பற்றிப் பேசுகிறாளே என்று எண்ணுகிறாயா? தர்மம் இப்போது காட்டுக்குத்தான் வந்திருக்கிறது. அது எங்கள் இதயங்களில் குடிகொண்டிருக்கிறது'' என்றாள் அவள்.

''அதைப் பற்றியெல்லாம் விரிவாகப் பேச என்னால் இப்போது முடியாது. இப்போது என்னைக் கொண்டு போய் விட்டுவிடு'' என்று கலங்கினாள் கோதை.

'' உன் மாமா குலசேகர ஆள்வார் எங்கே இருக்கிறார் தெரியுமா? அவர் திருக்கண்ணபுரத்துக்கு வந்து விட்டார். பாவம்! இன்னும் கொஞ்ச காலம் தான் அவர் இருப்பார்!'' என்றாள் அந்தப் பெண்.

உடனே பயத்தை மறந்த நிலையில், '' எங்கே? திருக்கண்ணபுரத்திலா?'' என்று கேட்டாள் கோதை.

'' ஆம். திருக் கண்ணபுரத்தில் கொஞ்ச நாட்கள் இருப்பார். இந்தத் திவ்ய தேசத்திலும் அவர் பூத உடல் கொஞ்ச நாட்கள்தான் இருக்கும்!'' என்றாள், அந்தப் பெண்.

'' இதென்ன, ஆருடமா?'' என்று கேட்டாள் கோதை.

''ஆம். அதை நான் நன்றாகக் கணிப்பேன்!'' என்றாள் அவள்.

''அப்படியென்றால், இந்த வனத்திலிருந்து எங்களுக்கு எப்போது விடுதலை கிடைக்கும் என்று சொல்ல முடியுமா?''

''அதை நான் உனக்குச் சொல்லக் கூடாது. ஆருடத்தில் உள்ள ரகசியமே அதுதான். ஒருவருடைய வாழ்வைப் பற்றி அடுத்தவர்களிடம் கூறலாமே தவிர, அவர்களிடமே சொல்லக் கூடாது. ஒரு வேளை உன் மாமன் குலசேகர ஆள்வாரை நான் சந்திக்க நேர்ந்தால் அவரிடம் அதைச் சொல்வேன்'' என்றாள் அவள்.

### பில்லியர்டு பிறந்தது!

இந்த விளையாட்டுக்கு மூலகர்த்தா பதினாறாம் நூற்றாண்டில் இங்கிலாந்தில் வசித்த Bill Kew என்ற அடகுக் கடைக்காரர்தான். கடையில் வியாபாரம் இல்லாதபோது மூன்று பந்துகளை வைத்துக்கொண்டு கெலுக்கோலால் ஒவ்வொன்றையும் இங்கே அங்கே தள்ளுவார். அக்கடைக்கு அடிக்கடி வந்த கிறிஸ்தவப் பாதிரிமார்களுக்கு இவ்விளையாட்டு ரொம்பப் பிடித்திருந்தது. Bill yardஐ வைத்துக் கொண்டு விளையாடியதால் Billy-yard என்று இவ்விளையாட்டுக்குப் பெயரிட்டார்கள். நாளடைவில் Billiard என்று அழைக்கப்பட்டது.

- வி. எஸ். கிருஷ்ணமூர்த்தி.

---

"எனக்குச் சந்தேகமாக இருக்கிறது. நீ ஒரு சூனியக்காரி. தயவு செய்து என் உயிரைக் காப்பாற்றிக் கொண்டு போய் விட்டுவிடு" என்றாள் கோதை.

"நான் ஒரு சூனியக்காரிதான்! சூனியத்திலேதான் என் ராஜாங்கம் நடந்து கொண்டிருக்கிறது. நீங்கள் மட்டும் என்ன, சூனியத்தில் தொடங்கிச் சூனியத்தில்தான் முடியப் போகிறீர்கள்" என்றாள் அவள்.

"தாயே! இவ்வளவு ஆழமான தத்துவங்கள் எல்லாம் எனக்குப் புரியாதம்மா!" என்றாள் கோதை.

"ஒரு நாள் உனக்குப் புரியும். சரி வா. உன்னைக் கொண்டு போய் விட்டு விடுகிறேன்" என்று, முன்னால் நடந்தாள்.

கொஞ்ச தூரம் நடந்ததும், "ஒன்றை மறந்துவிட்டேன். கொஞ்சம் நில்" என்றாள்.

கோதை நின்றாள்.

"இப்போது இருக்கிற நிலைமையே நீடிக்கும் என்று நீ கருதாதே. இதோ இந்த வேரை வாயில் போட்டுக் கொள்!" என்று ஒரு வேரைக் கொடுத்தாள் அந்தப் பெண்.

ஏதோ ஒரு சக்தி அதை வாங்கிக் கொள்ள வேண்டும்போல் தூண்டிற்று. வாங்கி வாயில் போட்டு விழுங்கினாள்.

வேட்டுவப் பெண் மீண்டும் முன்னால் நடந்தாள்

இப்போது அவள் நடந்து செல்வதாகக் கோதைக்குத் தோன்றவில்லை. ஒரு வேங்கையின் மீது சவாரி செய்து கொண்டு போவது போல் தோன்றிற்று.

குடில் அருகே வந்ததும், "நீ உள்ளே போ!" என்றாள், அந்தப் பெண்.

அவளையே திரும்பிப் பார்த்தபடி உள்ளே நுழைந்தாள் கோதை.

உள்ளே ஒரே இருட்டு.

"பிரபு! பிரபு!" என்று அழைத்தாள் கோதை; பதில் இல்லை.

வெளியிலே அந்தப் பெண் சிரிக்கும் சத்தம் கேட்டது.

மீண்டும், "பிரபு! பிரபு!" என்று கத்தினாள் மெல்லிளங்கோதை. பதில் இல்லை.

தன் நாயகனைக் காணவில்லை என்று முடிவு கட்டினாள் கோதை. அடி வயிறு வலிக்க, "பிரபு!" என்று ஓங்கிக் கத்தினாள்.

"என்னம்மா! என்ன!" என்று எழுந்து உட்கார்ந்தான் மார்த்தாண்டவர்மன்.

பக்கத்தில் படுத்தபடியே திருதிருவென்று விழித்துக் கொண்டிருந்தாள் கோதை.

"அந்தப் பெண் போய்விட்டாளா?" என்று கேட்டாள்.

"எந்தப் பெண்?" என்று கேட்டான் மார்த்தாண்டவர்மன்.

"என்னை அழைத்துக் கொண்டு போனாளே சிவப்பு மூக்குத்தி. அவள் தான்" என்றாள் கோதை.

"உன்னை யாரும் அழைத்துக் கொண்டு போகவில்லையே!" என்றான் மார்த்தாண்டவர்மன்.

"பின் நான், நான்..." என்று இழுத்தாள் அவள்.

"குருதேவரின் ஆசிரமத்தில் இருந்து வந்ததும் உன் முகம் வியர்த்திருந்தது. உனக்கு மயக்கம் வருவதுபோல் எனக்குத் தோன்றிற்று. உடனே உன்னைப் படுக்க வைத்து நான் விசிறிக் கொண்டிருந்தேன். நீ தூங்கிவிட்டாய். எனக்கும் இந்தப் பகல்பொழுதில் தூக்கம் வந்தது. நானும் தூங்கிவிட்டேன்" என்றான், மார்த்தாண்டவர்மன்.

"பகவானே! பட்டப் பகலிலும் ஒரு கனவா? பிரபு! யாரோ ஒரு பெண், அரசர் திருக்கண்ணபுரம் வந்திருப்பதாக எனக்குச் சொன்னாள். அது உண்மையாய் இருக்குமா? பகல் கனவு பலிக்குமா?" என்று கேட்டாள் கோதை.

"பகல் கனவுக்கு அர்த்தமில்லை என்றுதான் சொல்வார்கள். கனவிலே வந்த பெண், 'திருக்கண்ணபுரம்' என்று குறிப்பிட்டே சொன்னாளா?" என்று கேட்டான் மார்த்தாண்டவர்மன்.

"ஆமாம், பிரபு!" என்றாள் கோதை.

தூரத்தில் ஏதோ ஆரவாரம் கேட்டது. பதைப்போடு ஒரு சேடன் உள்ளே ஓடி வந்தான்.

"உங்களைத் தேடிக் கொண்டு ரவிவர்மனின் சேனைகள் இந்தக் காட்டுக்கும் வந்திருக்கின்றன. என்னோடு வாருங்கள்" என்றான் அவன்.

அவர்கள் இருவரும் அவசரம் அவசரமாக எழுந்து அவன் பின்னே சென்றார்கள். (தொடரும்)

# மூன்றாம் தலைமுறை!





ரமேஷ்

ரமேஷ்: சங்கருக்கும் எனக்கும் கிரிக்கெட்டிலே ஆசை அதிகம். தாத்தா எங்களுக்கு டென்னிஸ் கற்றுக் கொடுத்தார்!

சங்கர்: நாங்க தாத்தாவுக்கும் 'டிமிக்கி' கொடுத்திருக்கோம்! தாத்தா டென்னிஸ் மைதானத்திலே இருக்கிற வரை டென்னிஸ் ஆடுவோம். அப்புறம் கிரிக்கெட்!

ரமேஷ்: டென்னிஸ் 'போஸ்ட்' விக்கெட்! டென்னிஸ் மட்டை கிரிக்கெட் பாட்! சங்கர் டென்னிஸ் பந்தை 'பௌல்' பண்ணுவான்!

சங்கர்: ஒருநாள் எங்கள் கிரிக்கெட் ஆட்டம் தாத்தாவுக்குத் தெரிந்து போச்சு! ரொம்பக் கடுமையா கோவிச்சுண்டார்! டென்னிஸ் மைதானத்தைச் சுற்றிப் பல 'ரௌண்ட்' ஓடச் சொன்னார்! ரமேஷுக்கும் எனக்கும் சின்ன வயசிலேயிருந்து டென்னிஸ் பயிற்சி; அதோடு போட்டி! சண்டை! ஒருவருக்கொருவர் சிண்டைப் பிடிச்சிண்டு அடிச்சுப்போம், தாத்தா வீட்டிலே! இப்போ வயசு ஏற ஏறச் சண்டை போடறது குறைஞ்சு போச்சு. நாங்க ரெண்டு பேரும் கொச்சியில் தென்மேற்கு இந்தியா டென்னிஸ் போட்டியில் அடியெடுத்து வைத்தோம்!

ரமேஷ்: அந்த முதல் மாட்சிலேயே இருவரும் முதல் ரவுண்டில் தோத்துட்டோம்!

சங்கர்: ஸார்! இந்தப் பொடியன் ரமேஷ் எம். ஸி. ஸி. டென்னிஸ் சப் ஜூனியர் போட்டியிலே என்னை ஜயிச்சுட்டான்! என்னை விடக் குறைந்த வயசுப் பையனிடம் தோற்றது எனக்கு அவமானமாப் போச்சு! பிறகு ஜிம்கானா போட்டியிலே ரமேஷை ஜயிச்சப்புறம் தான் மனசு சமாதானமாச்சு!

ரமேஷ்: ஒவ்வொரு முறை ஜெயிக்கும் போதும் தாத்தா ஐஸ்கிரீம் பரிசு தருவார்!

சங்கர்: ரமேஷ் வித்யா மந்திரிலே பதினோராவது வகுப்பு படிக்கிறான்! கூடிய சீக்கிரம் அவனும் விவேகானந்தா காலேஜுக்கு என்னோடு வருவான். நான் பி. ஏ. இரண்டாம் வருஷம் படிக்கிறேன்.

ரமேஷ்: சங்கர் ஜூனியர் விம்பிள்டன் போல் ஆடிட்டு வந்திருக்கான்.

கிருஷ்ணன் (இடையில் புகுந்து): ஸார்! டென்னிஸ் நகர்ப்புறங்களோடு நின்று விடாமல் அதைக்கிராமங்களுக்கும் எடுத்துச் செல்ல வேண்டும்! அவர்களுக்கு இந்த ஆட்டத்தைக் காண்பதிலே எத்தனை ஆசை தெரியுமா? பெரிய டென்னிஸ் ஆட்டக்காரர் வருஷத்திலே சில நாட்கள் சிறு ஊர்களுக்குச் சென்று ஆட வேண்டும்.

ரமேஷ்: எங்க அப்பா பேச்சோடு நிறுத்திக்கல்லே. நர்சபூர், குண்டூர் போன்ற சிறு ஊர்களில் நடக்கும் போட்டிகளுக்கும் எங்களை ஆட அழைச்சுட்டுப் போறார்!

சங்கர்: நாங்க நாகர்கோயிலிலே நடந்த டென்னிஸ் போட்டியிலே ஆடிட்டு இன்று காலையிலேதான் காரிலே வந்தோம்!

ரமேஷ்: நாகர்கோயிலிருந்து சென்னை வர்றத்துக்குள்ளே இந்தக் கடுமையான வெய்யில்லே எங்க கார் டயரே உருகிப் போச்சு! ரொம்பத் தவிச்சுட்டோம்!

கிருஷ்ணன்: நாகர்கோயிலிலே அத்தனை பேரும் எங்க ஆட்டத்தை ரசித்து மகிழ்ந்தாங்களே, அதை நினைச்சா அத்தனை பிரயாணக் கஷ்டமும் மறந்து போயிடும்!

ரமேஷ்: அப்பா! வெய்யில் ரொம்பக் கடுமை! எங்க இரண்டு பேருக்கும் 'ஐஸ்கிரீம்' சாங்ஷன் பண்ணு!

சங்கர்: இந்தப் போட்டிக்குப் பரிசா நீங்களும் ஒரு ஐஸ்கிரீம் ஸாங்ஷன் பண்ணுங்களேன் ஸார்!

— குண்டுமணி

சங்கர்




இந்த வெயில் காலத்திலே 'லெம் அண்ட் ஸ்பூன்' ரேஸ் நடத்தறது தப்பு! ...
எலுமிச்சம்பழத்தோட ஒரு பையனைக் காணோம்!
திறந்த வெளிச் சிறையிலிருந்து தப்பி ஓடும் கைதி :-
ஜெயிலர் சார்! ஸ்டீல் ரன்னிங் ரேஸ்லே நான்தான் சாம்பியன்!

மேஜை மேலிருந்த கவரின் மூலையைக் கிழித்துவிட்டு, உள்ளே இருக்கும் கடிதத்தை எடுத்துப் படிக்கத் தொடங்கியவாறு உட்கார்ந்திருந்தார் நரசய்யா. விரல்கள் யோசனையாக மேஜையில் வைத்திருந்த கண்ணாடித் தகட்டின் மீது கோலங்கள் வரைந்தன.

கடிதத்தில் என்ன எழுதியிருக்கும் என்று அவருக்குத் தெரியும். அது அவருடைய மகள் மாலாவிடமிருந்து வந்திருக்கும் கடிதம். அவரைத் தன் வீட்டுக்கு வரச் சொல்லி அழைத்திருப்பாள். அவளுக்கு ஒரு குழந்தை இருக்கிறது இப்போது. குஞ்சுப் பயல் தத்தி நடக்க ஆரம்பித்திருப்பான். அப்பாவையும் அம்மாவையும் அழைக்கத் தொடங்கியிருப்பான். தாத்தா என்று அழைக்கக் கற்றுக் கொடுத்திருப்பார்களோ என்னவோ ?

தாத்தாவை அவன் பார்த்ததில்லை. மாலா மணம் செய்து கொண்ட பிறகு அவளை அவர் பார்க்கவில்லை. அவள் தாய்மை அடைந்திருந்த போதும் அவர் அங்கே போகவில்லை. குழந்தை பிறந்தது.... ஆண்டு நிறைவு.... இப்போது இரண்டு வயது ஆகப் போகிறது.... இன்னும் பார்க்கவில்லை.

கைச்சிகரெட்டை நசுக்கிவிட்டு, இன்னொரு சிகரெட்டைப் பற்ற வைத்தார். நியூஸ் பேப்பரின் விளம்பரத்தின் மீது அவர் கண்கள் ஓடின. விக்கெட் கீப்பர் இஞ்சினியரின் படம் போட்ட 'பிளேடு' விளம்பரம் அது. கிரிக்கெட் என்றாலே மாலாவின் ஞாபகம்தான் வரும் அவருக்கு. குழந்தையாக இருந்த நாள் முதல், வளர்ந்து பெண்ணாகி மணம் செய்து கொள்ளும் வரை, கிரிக்கெட் அவள் வாழ்க்கையில் ஒரு பாகமாக இருந்தது. அவள் மணம் செய்து கொண்டதும், அவரைப் பிரிந்ததும்கூட அதனால்தான்.

நேர்மையாக ஒரு காரியம் செய்யவில்லை என்றால் ஆங்கிலத்தில் 'இட் ஈஸ் நாட் கிரிக்கெட்' என்று சொல்வது வழக்கம். மாலா செய்தது — அவரை மீறிய அந்த முடிவு — 'கிரிக்கெட்'தானா? பெண்கள் பெரியவர்களாகிறார்கள்; மணம் செய்து கொள்கிறார்கள் ; தாயும் ஆகிவிடுகிறார்கள். ஆனால் புத்தியின் வளர்ச்சி மட்டும் முழங்கால் மட்டோடு நின்று விடுகிறது. — இதுதான் அவருடைய அபிப்பிராயம்; முக்கியமாக மாலாவைப் பொறுத்த வரையில்.

ஜன்னலுக்கு அப்பாலிருந்து அடுத்த அறைக் காற்று வீசிற்று. 'கிரிக்கெட் டெஸ்ட்' நடந்து கொண்டிருக்கிறது. ஒவ்வொரு பந்து வீச்சையும் நேர்முக வர்ணனையாகச் சொல்லுகிறார்கள். பந்துடன் கற்பனையும் மைதானம் முழுவதும் ஓடுகிறது.

மாலாவுக்கு இதைப் போல் 'கமெண்ட்ரி' என்றால் ரொம்பப் பிடிக்கும். குளிக்கும் சாப்பிடும் நேரம் தவிர, மற்றப் பொழுதெல்லாம் ரேடியோவின் அடியிலேயே உட்கார்ந்திருப்பாள். கையை உதறிக் கொள்வாள் ; சிரிப்பாள்; புலம்புவாள்; கைதட்டுவாள். அவளைக் கவனிப்பதே ஒரு தனி சுவாரசியமாக இருக்கும்.

தெருவில் விளையாடும் பையன்களைப் போல் கிரிக்கெட் ஆட முடியவில்லையே என்று அவளுக்கு எவ்வளவோ குறை. அதற்காக ஹாலில் அவளுக்காக அவர் ரப்பர்ப் பந்தை வைத்துக் கொண்டு 'பௌலிங்' செய்திருக்கிறார். அவர் மட்டையைப் பிடிக்க அவளும் 'பௌலிங்' செய்ததுண்டு — சக்கரவட்டமாகக் கையை உயர்த்திச் சுழற்றாமல் — 'அண்டர் — ஆம் — பௌலிங்'தான். அந்த நேரத்தில் அவளுடைய கற்பனையில் அந்தச் சிறு ஹாலே விரிந்து விசாலமான மைதானமாகிவிடும். ஜன்னல் வழியாக வெளியே பறந்த பந்து 'சிக்ஸர்' ஆகிவிடும்.

சிறு குழந்தையாக இருந்தபோதே, அந்த நாளில் வந்து கொண்டிருந்த 'ஸ்போர்ட் அண்ட் பாஸ்டைம்' பத்திரிகையிலிருந்து படங்களைக் கத்திரித்து நோட்டுப் புத்தகத்தில் ஒட்டுவாள். பட்டோடி நவாப் சென்னையில் ஆடிய முதல் தடவையில் 'செஞ்சுரி' போட்ட போது, அவளும் முதல் தடவையாக 'டெஸ்ட்' மைதானத்துக்குப் போயிருந்தாள். அப்போது அவளுக்குப் பத்து வயதுதான். அன்று இரவு முழுதும் அவள் தூங்கவில்லை. டோனி லாக்கின் சுழல் பந்து வீச்சைப் பட்டோடி அடித்த விதத்தைத் திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருந்தாள்.

வயது வந்த பிறகு அவளுடைய ஆர்வம், பத்திரிகைச் செய்தியுடனும் ரேடியோ வர்ணனையுடனும் நின்றுவிடவில்லை. சேப்பாக்கம் மைதானத்தில் ரஞ்சி — டிராஃபி முதல் டெஸ்ட் மாட்ச் வரை ஒவ்வொன்றையும் நேரே போய்ப் பார்க்க வேண்டும் என்று பிடிவாதம் பிடிப்பாள். பகல் முழுதும் வெய்யிலின் கானலில் உட்கார்ந்திருந்து விட்டுக் கூந்தல் பரட்டையாக அலைய முகம் கறுத்துத் திரும்பும் போது அம்மாவிடம் வசவு கிடைக்கும்.

போகியும் பொங்கல் பண்டிகையும் கொண்டாடியது பெற்றோர் மட்டும்தான். அந்த நாட்களில் அவள் வீட்டில் இருந்ததே



இல்லே. ஒவ்வோர் ஆண்டும் அந்தச் சமயத் தில் ஓர் இங்கிலாந்து கோஷ்டியோ, ஆஸ்தி ரேலியக் கோஷ்டியோ, மேற்கிந்தியத் தீவு கோஷ்டியோ வந்துவிடும். பகல் முழுவதும் சேப்பாக்கம் மைதானத்தில்தான் வாசம். ஜனவரி மாதத்துக்கு அந்தக் குடும்பத்தைப் பொறுத்தவரை இரண்டு முகங்கள். பொங் கல் பண்டிகை, பூஜை, விருந்து, கரும்பு— இப்படி ஒரு முகம். கையில் கட்டிக் கொண்டு போன சப்பாத்தி ரொட்டியுடன் அரை குறைச் சாப்பாடு, சேப்பாக்கத்தில் கிரிக்கெட் டெஸ்ட் திருவிழா, வெய்யிலில் — இப்படி இன்னொரு முகம்.

அந்த விளையாட்டு வெறும் ஆர்வமாக மட்டும் இல்லே. வாழ்க்கையில் பிரிக்க முடி யாத ஒரு பாகமாகவே ஆகிவிட்டது. அவ் வளவு தூரத்துக்கு அவர் இடம் கொடுத் திருக்கக் கூடாதோ என்றுகூடத் தோன்றிற்று, அப்புறம் அதன் விளைவுகளைப் பார்க்கும் போது. கல்லூரியில் சேர்ந்தபிறகு அவனே தீவிரமாக ஆட ஆரம்பித்துவிட்டான். அதற் கென்று தனியான உடை வேறு.

இளம் வயதிலேயே விறுவிறு என்று நல்ல 'பாட்ஸ்மேனா'க முன்னுக்கு வந்து கொண் டிருந்தான் சுரேஷ். பள்ளிக்கூடத்து டீம், அப்புறம் டிஸ்ட்ரிக் — லீட்டி மாட்சுகள், அப்புறம் ரஞ்சிக் கோப்பை ஆட்டம். படிப் படியாக இருபது வயதிலேயே முன்னணிக்கு வந்துவிட்டான். விளையாட்டில் இருந்த கவனம் படிப்பில் இல்லே. கல்லூரிப் படிப்பும் கூட முழுமையாக இல்லே. அவனுடைய கிரிக்கெட் ஆட்டச் சாமர்த்தியத்துக்காகப் பாங்கு ஒன்றில் வேலே கொடுத்திருந்தார்கள். பார்க்க நன்றாக இருப்பான். பச்சை நிற 'ப்ளேஸர் கோட்'டும் வெண்ணிற 'பாண்ட்' டும் அணிந்து கொண்டு வந்தால் பார்வை யைக் கட்டி நிறுத்துவது போல் இருக்கும். நல்ல நிறமும்கூட.

துலீப் — டிராபி மாட்சில் அவன் சேப்பாக் கத்தில் விளையாடிக் கொண்டிருந்தபோது, ஒரு நாள் அவனே வீட்டுக்கே அழைத்துக் கொண்டு வந்துவிட்டாள் மாலா. அப் போதும்கூட அதை ஒரு சாதாரண 'ஹீரோ ஒர்ஷிப்' என்றுதான் கணக்குப் போட்டிருந் தார் நரசய்யா. ஆனால் அந்த நட்பும் பழக்க மும், நெருக்கமாக முதிர்ந்து, சுரேஷைத் தான் கல்யாணம் செய்து கொள்வேன் என்று பிடிவாதம் பிடிக்கும் அளவுக்கு வந்துவிட்ட போது, அவருக்குப் பெரிய அதிர்ச்சியாகத் தான் இருந்தது.

அவர்களுடைய அந்தஸ்துக்கு ஏற்ற இடம் இல்லே. மாலா ஒரு 'கிராஜுவேட்'. சுரேஷ் அதுகூட இல்லே. அப்படிப் பெரிய



ஃப்ரட் ப்ரைஸ் கௌண்டி கிரிக்கெட் சாம்பியன்ஷிப் போட்டியில் ஏழு அற்புதமான 'காட்ச்'களைப் பிடித்தார். இதைக் கண்டு வியந்த பெண்மணி, "நீங்கள் ஆடிய ஆட்டத்தைக் கண்ட பூரிப்பிலே பால்கனியிலே மிருந்து விழுந்துவிட இருந்தேன்!" என்றாள்.

"அப்படியா? இன்று நான் ரொம்ப உற்சாகமாய் இருக்கிறேன். உங்களைக்கூட 'காட்ச்' பிடித்திருப்பேன்!" என்றார் ஃப்ரட் ப்ரைஸ்.



---

வேலைக்கு வந்து முன்னேறிவிடுவான் என்ற நம்பிக்கையும் அவருக்கு இல்லை. விளையாட்டில் பெயரும் புகழும் நன்றாக ஆடிக் கொண்டிருக்கும் வரையில்தான். அப்புறம் இருந்த இடம் தெரியாமல் போய்விடுகிறவர்கள் எத்தனை பேர்?

அவர் எடுத்துச் சொல்லியும் கேட்கவில்லை. அவர் சம்மதம் கொடுக்கவில்லை. அவரை மீறிப் பதிவுத் திருமணம் நடந்துவிட்டது. 'அம்பயர்' அவுட் என்று சொன்னால் சரியோ, தப்போ, கட்டுப்படுகிறவர்கள்தாம் இருவரும். ஆனால் வாழ்க்கையில் அப்படிக் கட்டுப்பட மறுத்துவிட்டார்கள்!

சுரேஷ் டெஸ்ட் மாட்சுகளில் ஆட ஆரம்பித்து விட்டான். அவர்களுக்குக் குழந்தை பிறந்தாயிற்று. கவாஸ்கரின் நட்பைக்கருதி சுனில் என்று பெயர் வைத்திருந்தார்கள்.

அவர் தப்பித் தவறி ஒரு தடவைகூட அவர்கள் வீட்டுக்குப் போகவில்லை. மணமான பிறகு இன்று வரையில் அவர் அவர்கள் முகத்தில் விழிக்கவில்லை. ஒரே ஊரில் இருந்தும் மிக சாமர்த்தியமாக அவர்கள் கண்ணில் படாமல் அவர் தப்பித்துக் கொண்டிருந்தார்.

மாலா சுபாவத்தில் கொஞ்சம் உறுதி இல்லாதவள்தான். சிறு விஷயங்களுக்கும் சட்டென்று கலங்கி விடுவாள். ஐம்பதினாயிரம் பேருக்கு முன்னால் பதற்றம் இல்லாமல் ஆடுகிற மனத்துணிவு கொண்டவன், கணவனுக்குத் துணை இருக்கும் தைரியமாக இருக்கலாம்.

இதைப் போலக் கடிதங்கள் வருவதுண்டு. அவர் பிரித்துப் படித்துப் பார்த்துவிட்டுக் கிழித்தெறிந்துவிடுவார். அதில் இருக்கும் உருக்கமான வாசகங்கள் அவர் உள்ளத்தில் ரசவாதம் செய்ததில்லை. இந்தத் தடவை கடிதம் வந்திருக்கிறது. கையில் எடுக்கும் போதே ஏனோ மனம் மருள்கிறது. பேரப் பயல் செய்கிற ஜாலமாக இருக்குமோ?

**பொ**ங்கலுக்கு இரண்டு நாட்கள்தாம் இருந்தன. நாளை முதல் தொடர்ந்தாற்போல் நான்கு நாட்கள் விடுமுறை. சென்னை சேப்பாக்கம் மைதானத்தில் டெஸ்ட்மாட்சு ஆரம்பமாகிறது. வெளிவந்துள்ள பன்னிரண்டு பெயர்களில் சுரேஷின் பெயரும் இருக்கிறது.

முடிவாக ஒரு தீர்மானத்துடன் கடிதத்தைப் பிரித்துப் படித்தார். "உங்கள் மருமகன் இரண்டாவது ஆண்டாக 'டெஸ்ட் மாட்சி'ல் விளையாடுகிறார். உங்கள் பேரனுக்கு இரண்டாவது ஆண்டு நிறைவு வரப் போகிறது. இந்தத் தடவை பொங்கல் பண்டிகையில் எனக்கு இரட்டை மகிழ்ச்சி. அதில் நீங்கள் கலந்து கொண்டால் எனக்கு எவ்வளவோ மன நிறைவாக இருக்கும். எனக்கு அப்பா அம்மா இரண்டு பேருமே நீங்கள்தாம். தவறுகளைக் குற்றங்களாக எடுத்துக்கொள்ளாதீர்கள். உங்கள் வாழ்க்கை நெறிகள் புரியாமல் தவறு செய்திருந்தால் மன்னிக்கவும்...."

மாலாவே நேரில் பேசுவது போல் இருந்தது. தொட்டிலே வதந்துவிடும் மலரிதழ் போன்ற மனம் அவளுக்கு. படிக்கும்போது கண்ணில் பனி படர்ந்து பார்வையை மறைத்தது. வர வர உணர்ச்சிகளை அவரால் அடக்க முடிவதில்லை. வயதாகிவிட்ட கோளாறோ?

பொங்கல் தினம். காரை எடுத்துக் கொண்டு சேப்பாக்கம் மைதானத்துக்குப் போனார். கையில் 'டெர்ரேஸ்' டிக்கட் ஒன்று இருந்தது. 'பைனாக்குலர்' தோளில் தொங்கிற்று. மாலா நிச்சயம் மைதானத்தில் பண்டிகை கொண்டாடிக் கொண்டிருப்பாள். அங்கே போனால் கண்டுபிடித்து விடலாம்.

ஆட்டம் தொடங்கி ஒரு மணி நேரத்துக்கு மேல் ஆகிவிட்டது. முதல் நாள் தேனீர் இடை நேரத்திலிருந்து இந்தியா தான் ஆடிக் கொண்டிருக்கிறது. முந்தைய நாள் கடைசி அரை மணி நேரம் ஆடிப் பதினைந்து ரன்கள் எடுத்திருந்தான் சுரேஷ். இப்போது ஒரு மணி நேரமாக ஆடுகிறான். அவன் இருபத்தைந்து ரன்களைக் கடந்தபோதும், நான்கு ரன்கள் அடித்த ஒவ்வொரு தடவையும், கூட்டத்தில் கைதட்டல் உதிர்ந்தபோது அவருக்கும் பெருமையாகத்தான் இருந்தது. பெண்ணின் பிரியத்தைப் பகிர்ந்து கொண்டவன் மீது இப்போது வெறுப்பு இல்லை.

'பைனாகுலரை' வைத்துச் சுற்றிப் பார்த்து அந்தப் பகுதிக் கூட்டத்தை அணு அணுவாக அளந்து கொண்டிருந்தார் நரசய்யா. கடைசியில் அவளைக் கண்டு பிடித்துவிட்டார். மடியில் குழந்தையுடன் உட்கார்ந்திருக்கிறாள். பெருமிதத்தில் மலர்ந்து நிற்கும் முகம்.

ஐம்பது ரன்கள்.... பட்டாசு வெடிக்கிறது. கைதட்டல்கள் முழங்குகின்றன.

ஆட்டம் தொடர்கிறது. திடீரென்று வந்த அந்த வேகமான பந்து வீச்சு — எதிர்பாராமல் விழுந்த 'பம்பர்', மோதிச் சீறிக் கொண்டு வந்தது. சுரேஷ் தலையைக் குனிந்து கொள்ளத் தவறி விட்டான். கூட்டத்தில் ஒரு பெருமூச்சு அலையாகப் பொங்கிற்று.

சுரேஷ் முகத்தை மூடிக் கொண்டு சரிந்து விட்டான். ஆட்டம் நின்றுவிட்டது. ஒரு திடுசாய் அவருக்கு அடி வயிற்றைத் துண்டவிட்டது. 'பக்'கென்று சில்லிட்டுக் கொண்டு ஓர் அதிர்ச்சி. கூட்டத்தில் திகில், குழறல், கூக்குரல் எல்லாம். சுரேஷ் எழுந்திருக்கவில்லை.

**ம**ருத்துவமனையில் இந்த இளம் உள்ளம் இப்படி வதைபடுகிறதே என்ற கனிவுடன் அவள் கையைப் பற்றினார்.

"மாலா...."

சிறு குழந்தை மாதிரி பிணங்கிக் கொண்டு அவள் அவர் கையை உதறினாள்.

"சந்தோஷமாக இருக்கும்போது எவ்வளவோ தடவை நீங்க வரணும் என்று


MCA/J/Tam/1
மல்லிகைப்பூ
மணம் கமழ...
சுகபோகமிக்க
குளியல் சோப்
விலை ரூ. 1.47 பை.
மட்டுமே
(தலவரிகள் தனி)
Jasmine
மைசூர்
ஜாஸ்மின்
சோப்
கவர்ன்மெண்ட் சோப் ஃபாக்டரி, பெங்களூர் அளிக்கும் தரமிக்க தயாரிப்பு.
விற்பனை செய்பவர்கள்: மைசூர் ஸேல்ஸ் இன்டர்நேஷனல் லிட்., பெங்களூர்.

ஆசையாகக் கூப்பிட்டேன். நீங்கள் வரவில்லே. இப்போ நிறைவும் அழுகையுமா இருக்கிறப்போ வருவதற்குத்தான் உங்களுக்குக் கொடுத்து வைத்தது—''

அவர் தலையைக் குனிந்து கொண்டார். அவருடைய காலைப் பற்றிக் கொண்டு நிலமாக நிமிர்ந்து பார்த்த குழந்தையின் மீது அவர் பார்வை பட்சமாய்த் தங்கிற்று. அவளை அள்ளி எடுத்துப் பால் சதை அமுங்க முத்தமிட்டார். குழந்தைக்கு அம்மா அழுவதின் காரணமும் புரியவில்லே. புதிதாக வந்த ஒருவர் தன்னை எடுத்து முத்தமிடுவதன் நோக்கமும் புரியவில்லே. வாய்விட்டுச் சிரித்தது.

''அப்பா, எனக்குத் தைரியம் வந்தாகிற்று. எனக்காக இங்கே வரவேண்டாம். அவருக்காக, இந்தக் குழந்தைக்காக வந்தால் போதும். இப்போது அவருடைய நிலையில்...'' உணர்ச்சி மிகுந்து தொண்டையை அடைக்க அவள் பிடிவாதமாக அவர் கையிலிருந்து குழந்தையை வாங்கி அணைத்துக் கொண்டாள்.

அவர் அவளுடைய முகத்தை வெறித்துப் பார்ப்பதும், பிறகு தலையைக் குனிந்து யோசிப்பதும், கால் கட்டை விரலால் தரையில் கிறுக்குவதுமாக இருந்தார்.

சுரேஷைத் தியேட்டருக்குள் எடுத்துக் கொண்டு போய்விட்டார்கள். பக்கத்தில் உள்ள 'ஸ்பெஷல்' அறையில் கிரிக்கெட் நேர்முக வர்ணனை தொடர்ந்து கேட்டுக் கொண்டிருந்தது. அவளுடைய முகத்திலேயே ஒரு நேர்முக வர்ணனையைப் பார்த்துக் கொண்டிருந்தார் நரசய்யா. அதில் தெரிந்த, வெற்றி தோல்விகள், கலக்க ஆறுதல்கள், தயக்க உறுதிகள் — ஒன்றுக்கொன்று முரணாக மாறி மாறி விடிந்த உணர்ச்சிகள்.

கிரிக்கெட் ஆட்டத்தின் உன்னதமே அது வாய்ப்பைப் பொறுத்து எதிர்பாராமல் மாறுவதுதான் — இட் ஈஸ் ஏ கேம் ஆப் சான்ஸ்— வாழ்க்கையும் அப்படித்தான். எதிர்பாராத விதமாக இப்படி ஒரு திருப்பம். மகிழ்ச்சிகரமான எதிர்பார்ப்பை மீறிய ஒரு 'ஸ்டம்பிங்', ஆறு ரன்னுக்குப் பந்தைத் தூக்கிவிட்டது போல் ஒரு பெருமையில் அவர் இருந்தபோது, விக்கெட்டையே இழந்தது போன்ற தோல்வி உணர்ச்சி....

அறையிலிருந்து டாக்டர் வெளியே வந்தார். அவர் முக மலர்ச்சியைக் கண்டதும் மாலா ஒரு புதுத்தெம்புடன் எழுந்து நின்றாள்.

''கவலைப்படாதீர்கள். கண்ணில் அடி ஏதும் படவில்லே. கன்னத்தில் தையல் போட்டிருக்கிறோம். நாலைந்து நாட்களில் எல்லாம் சரியாகிவிடும். அடுத்த இன்னிங்ஸில் ஆட முடியாவிட்டாலும், அடுத்த 'டெஸ்டி'ல் நிச்சயமாக ஆடலாம்!''

ஒரு சந்தோஷ அதிர்ச்சியிலும் அவள் உடல் கிடுகிடுவென்று ஆடிற்று. அவர் எழுந்து அவள் தோளைப் பற்றிக் கொண்டார். உணர்ச்சிகள் கரை உடைந்தன. சிறு குழந்தையைப்போல் அவர் தோளின்மீது முகத்தைப் பதித்துத் தேம்பினுள் மாலா.

''அவர் நிச்சயமாக ஆடுவார் அப்பா. இப்படி ஓர் அடிபட்டதைப் பொருட்படுத்த மாட்டார். அவரைத் தேர்ந்தெடுத்தால் அடுத்த தடவை நிச்சயமாக இன்னும் நன்றாக



இந்தூரில் உள்ள கமலா நேரு பார்க்கில் ஒரு நூதனமான நினைவுச் சின்னம் இருக்கிறது. சுமார் நாற்பது அடி உயரத்துக்குக் கான்கிரீட்டினால் ஒரு கிரிக்கெட் மட்டையைச் செய்து நிறுத்தி இருக்கிறார்கள் அங்கே. இங்கிலாந்து, மேற்கிந்தியத் தீவு கோஷ்டிகளுக்கு எதிராக டெஸ்ட் பந்தயங்களில் இந்தியா அடைந்த வெற்றியைப் பாராட்ட நிறுவப்பட்ட இந்த நினைவுச் சின்னத்தில் ''இந்திய கிரிக்கெட் என்றும் தலைசிறந்து விளங்கட்டும்!'' என்று எழுதி இருக்கிறது. 1972ம் ஆண்டு ஜூன் மாதம், அப்போது இந்தியக் கிரிக்கெட் காப்டனாக இருந்து விளையாடிய வடேகர் இந்த நினைவுச் சின்னத்தைத் திறந்து வைத்தார்.

- ஜெயஸ்ரீ விசுவநாத்

ஆடுவார். கிரிக்கெட்டில் மட்டும் இல்லே. வாழ்க்கையிலேயே எத்தனையோ விதமான எதிர்ப்புக்களைச் சந்தித்துச் சமாளித்தவர் அவர்'' என்று அவர் முகத்தைப் பார்த்தாள். ''உங்களேயுந்தான்!'' என்று சொல்வது போல் இருந்தது அந்தப் பார்வை.

அந்த முகத்தில் கடுகடுப்பும் கடினமும் இருந்து அவள் பார்த்திருக்கிறாள். விட்டுக் கொடுக்காத பிடிவாதமும் கோபமும் படர்ந்து நிற்கக் கவனித்திருக்கிறாள். இப்போது அதே முகம் பரிவினால் இளகியிருந்தது. சுரேஷைப் பற்றிய வெறுப்பு மறைந்து பெருமை ததும்பிக் கொண்டிருந்தது.

அம்மா அவளைக் கேலி செய்யும் ஞாபகம் வந்தது. ''உன்னைப் பொறுத்தவரையில் ஜனவரி மாதத்துக்கு இரண்டு முகங்கள்!'' என்று. இப்போது அவள் பார்க்கிறாள். இந்த ஜனவரி மாதம் அப்பாவுக்கும் இரண்டு முகங்கள்தாம்.

நரசய்யா அவளை இலேசாக முதுகில் தட்டிக் கொடுத்தார். நெற்றியில் கலைந்த மயிரைப் பரிவுடன் ஒதுக்கிவிட்டார்.

''மாலா! இதோ பார். இதோ பாரம்மா. இப்போது நான் வாழ்க்கையில் நான்கு வருஷங்கள் பின்னால் போய்க் கொண்டிருக்கிறேன். நான் இதுவரையில் இழந்ததையெல்லாம் புரிந்து கொள்கிறேன். சிந்தின பாலே எடுக்க முடியாது என்பார்கள். இங்கே இப்போது சிந்தின பாலே மறுபடியும் ஒற்றிப் பாத்திரத்துக்குள் எடுத்துக் கொண்டிருக்கிறேன். கரிப்பு ஏறி அது திரிந்து போகவில்லே. இன்னும் இனிப்பாக அமுதமாக இருக்கிறது.''

அவள் பெருமூச்செறிந்தாள். இருவரும் மௌனமாயினர்.

அவர்களை நோக்கி வந்த நர்ஸ் ''சுரேஷ் மயக்கம் தெளிந்து, கண்களைத் திறந்து கொண்டு படுத்திருக்கிறார். நீங்கள் வேண்டுமானால் அவரைப் பார்க்கலாம் என்று டாக்டர் சொல்கிறார்'' என்றாள்.

மகளையும் பேரனையும் அழைத்துக் கொண்டு அறை வாசலை நோக்கி நடந்தார் நரசய்யா. அவருக்கு இது இரண்டாவது இன்னிங்ஸ். இதில் அவர் தவறு செய்ய மாட்டார்....

# பொன்னியின் புதல்வர்



சுந்தா

## 34. பண்பாட்டுக் காவலர்

**நாதம் நாதம் நாதம்**
**நாதத்தே யோர் நலிவுண்டாயின்**
**சேதம் சேதம் சேதம்** — பாரதியார்

தமிழ் நாவல்களையும் சிறுகதைகளையும் பற்றி ஆங்கிலத்தில் ஒரு திறனாய்வுக் கட்டுரை எழுதியுள்ள விமலா மானுவேல், கல்கியின் படைப்புக்கள் பற்றிய அதன் பகுதிக்கு, ''பண்பாட்டுக் காவலர்'' என்று தலைப்புக் கொடுத்துள்ளார். (கட்டுரை வெளியாகியுள்ள சஞ்சிகை — Religion and Society, Vol XVII, No. 4, 1970)

''பண்பாட்டுக் காவலர்'' என்பது கல்கிக்கு முற்றிலும் பொருத்தமான வர்ணனை. பாரதப் பண்பாட்டையும், அதன் உறுப்பான தமிழகப் பண்பாட்டையும் போற்றியவர் அவர்; தாம் போற்றியதைத் தமது எழுத்தின் மூலம் பிறரையும் போற்றச் செய்தவர். பல்லாண்டு காலமாக நம் நாட்டில் வளர்ந்து வந்துள்ள சமயக் கருத்துக்கள், தத்துவங்கள், இலக்கியங்கள், கலைகள், பழக்க வழக்கங்கள், ஒழுக்க நெறிகள் — இவை யாவும் பொதிந்ததே நமது பண்பாடு. இந்தப் பண்பாட்டை அகத்தே கொண்டதுதான் அவருடைய ஆளுமை — (personality) இந்த ஆளுமையில், அவர் காலத்தில் எழுந்து பரவிய தேசிய உணர்ச்சியும் அதன் விளைவுகளும் சேர்ந்து கொண்டன.

பழமையைக் கல்கி போற்றினாராயினும், காலத்துக்கு ஏற்ற மாறுதல்களையும் சீர்திருத்தங்களையும் வரவேற்றார்; அவை அவசியம் எனக் கருதினார்; அவற்றுக்காகவும் தம் எழுத்து வன்மையைப் பயன்படுத்தினார். ஆனால் புதுமைக்காக நமது பண்பாட்டைப் பணயம் வைப்பதை எதிர்த்தார். கண் இரண்டும் விற்றுச் சித்திரம் வாங்கலாகாது என்று பாரதியாருடன் சேர்ந்து வலியுறுத்தினார்.

கல்கியின் ஆளுமை இத்தகையது என்பது, முன் அத்தியாயங்களிலிருந்து நன்கு தெரிந்த ஒன்றே; ஆயினும் இங்கே அதைச் சுருக்கமாய் இனம் காட்டியதன் காரணம், அவருடைய சொந்தப் பத்திரிகை அவருடைய சொந்த ஆளுமைப் பத்திரிகையாக விளங்கிற்று என்பதைச் சொல்வதற்கேயாகும். கல்கிப் பத்திரிகை கல்கி மயமாய் இருந்தது — அவருடைய எழுத்தின் அளவினாலும் அப்படி; குணத்தினாலும் அப்படி. அதில் அவர் வெளியிட்ட ஒத்த மனத்தினரின் எழுத்தினாலும் அப்படியே.

பெயர் போட்டுக் கொள்ளாமல் தலையங்கமும் செய்திக் குறிப்புக்களும்; கல்கி என்ற புனைபெயரில் தொடர்கதை அல்லது சிறுகதை; ரா. கி. என்ற பெயரில் கட்டுரை; கர்நாடகம் என்ற மூன்றாவது பிரபல புனைபெயரில் கலை விமரிசனங்கள் — எல்லாமாய்ச் சேர்ந்து ஒவ்வோர் இதழிலும் கிட்டத்தட்ட பாதி அளவு. ஒரு நாவலில் கதாநாயகனுக்கும், ஒரு நாடகத்தில் ராஜபார்ட்டுக்கும் உரிய பாகத்தை அவர் தமது பத்திரிகையில் வகித்தார். அவ்வாறு கல்கியே கல்கியில் பிரதானமாய் இருந்ததை ஒரு சிறப்பாகக் கருதியவர்களும் உண்டு; ஒரு குறையாகக் கருதியவர்களும் உண்டு. யார் எப்படிக் கருதினாலும் அதுவே கல்கிப் பத்திரிகையின் தனித் தன்மையாய் இருந்தது; அதுவே அதன் வெகுவான செல்வாக்குக்கும், செலாவணிக்கும் பெரிதும் காரணமாய் இருந்தது.

தமது பத்திரிகையில் எதை எதை வெளியிடலாம் என்பது பற்றியும், எதை எதை வெளியிடக் கூடாது என்பது பற்றியும் நிச்சயமான விருப்பு வெறுப்புக்களைக் கல்கி கொண்டிருந்தார். விருப்பத்தைத் தமது பத்திரிகையின் பொருளடக்கத்தில் காட்டினார்; வெறுப்பினை இடித்துரைக்கும் கட்டுரைகள் சிலவற்றில் காட்டினார்.

அத்தகைய கண்டனக் கட்டுரை ஒன்றை, அகில இந்தியப் பத்திரிகாசிரியர் மாநாட்டின் தலைவர் தேவதாஸ்

காந்தி. ''பத்திரிகை தர்மம்'' பற்றி, 1949 ஜனவரியில் சென்னையில் நிகழ்த்திய உரை ஒன்றைக் கேட்டுவிட்டு எழுதினார். அவதூறுகளையும் ஆபாசத்தையும் வெளியிடுவோர்மீது தேவதாஸ் காந்தி தொடுத்த தாக்குதலுக்குப் பக்கபலமாகக் கல்கியும் கண்டனச் சொல்லம்புகளை வீசினார் :

தமிழர்கள் சிறந்த பண்பாட்டுக்கு உதாரணமானவர்கள். பேச்சிலும் எழுத்திலும் தூய்மையைக் கடைப்பிடித்து ஆபாசத்தை வெறுப்பவர்கள். எதிரிகள் விஷயத்திலும் மரியாதையுடன் நடந்து கொள்கிறவர்கள்.

நாலு பேர் உள்ள இடத்தில் ஸ்திரீ புருஷ சம்பந்தத்தைப் பற்றிப் பேசுவதற்குத் தயங்குவார்கள். பேச அவசியம் நேர்ந்தாலும் மிக நாசூக்காகப் பேசுவார்கள். ஸ்திரீகள் உள்ள இடத்தில் அசந்தர்ப்பமாக ஒருவன் ஏதாவது பேசி விட்டால், அதைக் காட்டிலும் அவனுக்கு அவமானம் வேண்டியதில்லை. இது தமிழர்களுடைய பண்பாடு; தமிழர்களுடைய மேன்மை. தமிழர்களுடன் பிறந்த இயற்கைக் குணம்.

ஆனால் சில காலமாகத் தமிழ் மக்களுடைய பண்பாட்டுக்கும் இயற்கைக் குணத்துக்கும் முற்றும் மாறான காரியங்கள் சில நடந்து கொண்டு வருகின்றன. தமிழ் டாக்கிகளில் ஆபாசமான காட்சிகள் வருகின்றன. ஆபாசமான வார்த்தைகள் பேசப்படுகின்றன. தெய்வங்களைக்கூட ஆபாசங்களுக்கு உட்படுத்தி விடுகிறார்கள். ஆபாச டாக்கியினால் தமிழர்களின் பண்பாட்டுக்குக் கேடு வந்தது. அதைவிட அதிகமாக ஆபாசப் பத்திரிகைகளின் மூலம் வந்தது. ஸினிமாக்காரர்களின் 'சொந்த வாழ்க்கை'களை ஆதாரமாகக் கொண்டு, முதலில் அத்தகைய ஆபாசப் பத்திரிகைகள் எழுந்தன. பிரபலஸ்தர்களைப் பற்றிய நல்ல விஷயமானாலும் கெட்ட விஷயமானாலும், அதைத் தெரிந்து கொள்ள ஆவல் கொள்வது மனித இயற்கை. அந்த மனித இயற்கையை யொட்டி ஆபாசப் பத்திரிகைகளுக்கு கிராக்கி ஏற்பட்டது.

ஒரு மனிதன்—ஸினிமாக்காரனாயினும் வேறு யாராயினும் — ஒழுக்கக் கேடு அடைந்தால், அதற்குரிய தண்டனை அவனை வெகு சீக்கிரத்தில் வந்து அடைகிறது. இது புருஷனுக்கும் சரிதான்; ஸ்திரீக்கும் சரிதான். அவரவர்களுடைய துர்மார்க்கத்தின் பலனை அவரவர்களே சீக்கிரத்தில் அனுபவிக்கிறார்கள். துன்மார்க்கமும் அதன் தீய பலனும் அவர்களுடனே போய்த் தொலைகின்றன.

ஆனால், ஒரு மனிதனுடைய துன்மார்க்கத்தைக் கண்டுபிடித்து வெளிப்படுத்துவதாகச் சொல்லிப் பத்திரிகையில் வெளியிடுவதன் பயன் என்ன? பிரபலஸ்தர்களைப் பற்றித் தெரிந்து கொள்ளும் ஆசையினால் அதை ஆயிரக் கணக்கானவர்கள் படிக்கிறார்கள். ஸ்திரீகள் படிக்கிறார்கள்; இளம் பிள்ளைகள் படிக்கிறார்கள். எல்லாருடைய மனங்களும் அசுத்தமாகின்றன.

ஆபாசப் பத்திரிகைக்காரர்கள் ஸினிமாக்காரர்களின் சொந்த வாழ்க்கை விவரங்களோடு விடுவார்களா? அந்த விஷயம் பழசாகிப் போய்விட்டால் அதாவது சினிமாக்காரர்களின் அந்தரங்க வாழ்க்கைகளில் ஜனங்களுக்குச் சிரத்தை குன்றி விட்டால், அடுத்தபடி தேசத் தலைவர்களைப் பிடித்துக் கொள்கிறார்கள். லட்சக் கணக்கான மக்கள் தெய்வமெனப் போற்றும் மகான்களைக் குறித்து ஆபாசமான பொய்களை எழுதுகிறார்கள்.

■ அகில இந்தியப் பத்திரிகாசிரியர் மகாநாட்டின் தலைவர் தேவதாஸ்காந்தி பத்திரிகை தர்மம் பற்றி நிகழ்த்திய உரையைக் கேட்டுவிட்டு அதற்குப் பக்கபலமாகக் கல்கி எழுதினார்.

■ ஜெயாவுக்குக் கல்கியின் கடிதம்.




KALKI

29.1.48



பாஸ்கெட் பால் 'போஸ்ட்டு'கள் இரண்டும், முந்தின நாள் அடித்த புயல் காற்றில் விழுந்து விட்டன. பார்வையிட்ட இரண்டு கோஷ்டித் தலைவர்களும், ஆட்களை அவசரமாக அழைத்து, அவற்றை மறுபடியும் தரையில் நடச் சொல்லிவிட்டு, ஆட்டம் ஆரம்பிக்க ஐந்து நிமிஷம் இருக்கும்போது வந்து பார்த்தார்கள். கூடை கீழே தரையோடும், கம்பங்கள் ஆகாயத்தை நோக்கியும், தலை கீழாக நடப்பட்டிருந்தன. இரண்டு தலைவர்களும் சொன்னார்கள்: ''இனி மாற்றி நட அவகாசம் இல்லை. எல்லோரும் தலைகீழாக ஆடுங்கள்! கல்கி''

— சாருகேசி

இன்னும் சில பத்திரிகையாளர் வேறு ஒரு நவீன முறையைக் கையாளுகிறார்கள். உண்மைக் கதை என்று சொல்லிக் கொண்டு பொய்க் கதைகளை ஆபாசமான விவரங்களுடனும் வர்ணனைகளுடனும் எழுதுகிறார்கள். உண்மைக் கதையாக இருந்தால் என்ன? கட்டுக் கதையாய் இருந்தால் என்ன? ஆபாசம் ஆபாசமேயல்லவா?

(கல்கி இதழ் 23-1-49)

இந்தத் தாக்குதல், பண்பாட்டுக் காவலராய்க் கல்கி நெடுகிலும் வெளியிட்டு வந்த கருத்துக்களின் இயல்புக்கு ஓர் உதாரணம்; அத்துடன் சினம் கொண்டு தாக்கும்போதும் அவர் காட்டிய மொழிப் பண்புக்கும் ஓர் எடுத்துக்காட்டாகும். அரசியல் துறையிலும் திரைப்படத் துறையிலும் அவர் தொடுத்த தாக்குதல்கள் பற்பல. ஆனால் அவை யாவும், தாம் கேடாகக் கருதிய அரசியல் கொள்கைகள் நடவடிக்கைகளையும், திரைப்படச் சுவைக் கேடுகளையுமே குறியாகக் கொண்டவை. அரசியல் வாதிகளையோ சினிமாக்காரர்களையோ சொந்த முறையில் அவர் தாக்கியதில்லை; அவர்களுடைய சொந்த வாழ்க்கை நடத்தைகளைத் தாக்கியதில்லை. வன்மையான சொற்களை அவர் வீசியதுண்டு; ஆனால் கேவலமான சொற்களை ஒருபோதும் வீசியதில்லை.

கல்கியின் எழுத்துக்களுடன், ராஜாஜி ரசிகமணி ஆகியோரின் எழுத்துக்களும் சேர்ந்து, அவருடைய பத்திரிகைக்குத் தனியானதொரு பண்பாட்டுச் சிறப்பை அளித்தன. அம்மூவரின் எழுத்துக்கள் அடங்கியது போக மீந்த பக்கங்களில், கல்கி உதவி ஆசிரியர்கள் எழுதிய கதை கட்டுரைகள் இடம் பெற்றன. அவற்றில் விதவிதப் பான்மை உண்டுதான் என்றாலும், எல்லாம் கல்கி கைக்கொண்டிருந்த பண்பு நெறியுடன் பொருந்தியே இருந்தன.

அவைகளும் போக, வெளியாரின் எழுத்துக்களுக்கு எந்த இதழிலும் பத்துப் பக்கங்களுக்கு மேல் இடம் இருந்ததில்லை. அவ்வளவு குறைவான இடம் காரணமாய், நல்ல தரமான எழுத்தைத் தேர்ந்து அதில் வெளியிட முடிந்தது; மீண்டும் அதன் காரணமாகவே, எந்த ஒரு வெளி எழுத்தாளருக்கும் அபூர்வமாகவே அப்பத்திரிகையில் வாய்ப்புக் கிடைத்தது. அந்த அபூர்வ வாய்ப்பினை அடைந்தவர்களுக்குத் தனிப் பெருமை உண்டாயிற்று.

வெளியார் எழுத்துக்கள் எனில், பெரும்பாலும் சிறுகதைகளே. அவை எவ்விதமாய் இருக்க வேண்டும் என்று கல்கி விரும்பினார்? இரண்டாவது தமிழ் எழுத்தாளர் மகாநாட்டின் தலைமை உரையில், அவர் கூறிய ஒரு கதை பிறந்த கதை, இதற்கு விடை அளிக்கிறது:

வேடன் ஒருவன், ஆணும் பெண்ணுமாய்க் களித்திருந்த பறவைகளில் ஒன்றின் மீது அம்பு விட்டு அதைக் கொன்றான். எஞ்சிய பறவை அதைப் பார்த்துக் கதறியது.

இந்தக் காட்சியைக் கண்ட வால்மீகி முனிவரின் உள்ளத்தில் இரக்கமும் ஆத்திரமும் உண்டாயின. அந்த மகா முனிவரின் இரக்கமும் ஆத்திரமும் ஒரு சுலோகமாக வெளியாயின. பின்னர் அவற்றிலிருந்து உலகிலேயே ஒப்பற்ற இராமாயண இதிகாசம் எழுந்தது.

ஒரு சாதாரண எழுத்தாளனாய் இருந்தால், அந்தக் காட்சியைப் பார்த்து விட்டு, பறவையின் சோகத்தைத் துயரமான சொற்களில் கூறிவிட்டு, வேடனையும் திட்டி விட்டுப் போவான். இன்னும் சில எழுத்தாளர்கள் அந்த வேடனுக்குச் சாபம் கொடுப்பதுடன், அந்த வேடனைப் படைத்த ஆண்டவனையும் திட்டி இருப்பார்கள். வேறு சிலர், ''கடவுளே இல்லை; இருந்தால் இப்படிப்பட்ட கொடுமை நடந்திருக்குமா?'' என்று முடிவு கட்டி விடுவார்கள்.

ஆனால், சத்திய தரிசனம் செய்தவரான வால்மீகி முனிவர், மேற்கூறிய பரிதாப நிகழ்ச்சியைப் பார்த்த பிறகு, அதற்குக் காரணமான வேடனைச் சபித்து விட்டு நின்று விடவில்லை. கருணையும் நேர்மையும் மற்றும் உத்தம குணங்களும் படைத்த சத்புருஷனாகிய இராமரிடம் அவருடைய நினைவு போயிற்று. ''இந்தக் கருணையற்ற வேடனைச் சபித்துக் கொண்டிருப்பதில் என்ன பயன்? கருணா மூர்த்தியான இராமனுடைய கதையைக் காவியமாக ஆக்குவேன்'' என்று தீர்மானித்தார்.

அதிலிருந்து, என்றும் அழிவுறாச் சிரஞ்சீவிக் காவியம் உதித்தது. உண்மை குடி கொண்ட உள்ளத்தில் இரக்கம் முதலிய நல்

# மீண்டும் கிடைக்கிறது ரிக்கரி டம்ளர்




டம்ளர் பாக்கிங்கில் உள்ள ரிக்கரியை, ரிக்கரி ஜாடிக்கு மாற்றி, கண்ணாடி டம்ளரை உடனே உபயோகித்துக் கொள்ளலாம்

இப்பொழுது 50 காசு குறைவு

ஸ்டாக் குறைவாக உள்ளது

Nestlé
## ரிக்கரி
இன்ஸ்டன்ட்

வறுத்து அரைத்த காப்பியின் சுவையை ஏறக்குறைய அதே விலையில் உங்களுக்கு அளிக்கிறது

NRCM-29-76 TAM

னுணர்ச்சிகள் பொங்கி வரும்போது தான் நல்ல இலக்கியம் சிருஷ்டியாக முடியும்.

(சுதேசமித்திரன்)

இதில் கடைசி வாக்கியத்துக்கு ஒரு விரிவுரை போல், கல்கிப் பத்திரிகையின் மிக உயரிய இலக்கியப் பரிசைப் பெற்றவரான உமாசந்திரன், ''ஒன்றிய உள்ளங்கள்'' என்ற தமது நாவலின் முன்னுரையில் சில வாக்கியங்கள் எழுதியுள்ளார் :

வடமொழியிலும் ஹிந்தியிலும் இலக்கியத்தைக் குறிக்கும் சொல் ''ஸாஹித்யம்'' என்பது. ஹிதத்தோடு கூடியது, அதாவது நன்மை பயப்பது என்ற பொருள் கொண்டது இந்தச் சொல். இலக்கியம் என்பதே லக்ஷ்யம் என்ற சொல்லின் திரிபுதானே! லக்ஷ்யம், அதாவது குறிக்கோள், உயர்வுக்கு வழி காட்டுவதாகத் தான் இருக்க முடியுமே ஒழிய, தாழ்வுக்கு வழி காட்டுவதாக இருக்க முடியாது. எந்த இலக்கியப் படைப்பும் படிப்பவரின் பண்பாட்டை உயர்த்துவதாக அமைந்து சமுதாயத்துக்கு நன்மை பயப்பதாக நின்று நிலவ வேண்டும் என்ற கருத்தையே, ''இலக்கியம்'' ''ஸாஹித்யம்'' என்ற சொற்கள் வலியுறுத்துகின்றன.

ராஜாஜியின் கதைகளில் பெரும்பாலானவை நீதிக் கதைகளுக்கு ஒப்பானவை; அவரைப் போன்றோர் அவற்றை எழுதியது சரியே. கல்கியின் முற்பாதிக் காலக் கதைகளில் பல, பிரசாரக் கதைகள்; அவரைப் போன்றோர் அக்காலத்தில் அவற்றை எழுதியதும் சரியே. அவ்விதக் கதைகளை எல்லாரும் எழுதினால் எப்படி? அதைக் கல்கி விரும்பவும் இல்லை, வேண்டவும் இல்லை. கதை — இன்பத்துக்கான கதைகளையே பிறரிடமிருந்து அவர் விரும்பி ஏற்று வெளியிட்டார். ஆனால் அந்தக் கதைகள், உத்தியினாலும் நடையினாலும் மட்டுமின்றி, உணர்ச்சியினாலும் பண்பினாலும் அழகு வாய்ந்ததாய் இருக்க வேண்டும் என்பதைக் கண்டிப்பானதொரு விதியாகக் கொண்டிருந்தார்.

இந்த விதிக்கு உட்பட்டதான நல்ல கதைகளும் சிறந்த கதைகளும் கல்கிப் பத்திரிகையில் வெளியாகி, தமிழ்ச் சிறுகதை இலக்கியத்துக்குத் தரமான வளம் ஊட்டின. அவற்றை எழுதியவர்களில் பாதிப் பேர் முன்பு ஆனந்தவிகடனில் கல்கியின் மூலம் ஊக்கம் பெற்றவர்கள்; அவர்களை ஏற்கனவே குறிப்பிட்டோம். மறு பாதி எழுத்தாளர்களைக் குறிப்பிடுவதென்றால் ஒரு பெரிய

○ மோட்டார் கார் பந்தயங்களில் மிகக் கஷ்டமானது மாண்டி கார்லோ கிராண்ட் ப்ரீ பந்தயம். இந்தப் பந்தயத்தில் கார்கள் மாண்டிகார்லோ தெருக்கள் வழியாகவும் துறைமுகம் வழியாகவும்



2 மைல் 65 கஜ தூரம் செல்ல வேண்டும். மூலைகளும் வளைவுகளும் நெளிவுகளும் ஏற்ற இறக்கங்களும் ஏராளம். இப்பாதையை 78 முறை சுற்றி வரவேண்டும். இதற்குள் 2,000 முறை கியர் மாற்ற வேண்டி நேரும்!

பட்டியலாகிவிடும். ஆகவே, அவர்களில், கல்கி நடத்திய சிறுகதைப் போட்டிகளில் பரிசு பெற்றவர்கள் அல்லது கல்கியின் பக்கங்களில் அடிக்கடி தோன்றியவர்கள் — இவர்களில் பின்னரும் தொடர்ந்து எழுதி மேலும் புகழ் ஈட்டியவர்களான சிலரை மட்டும் குறிப்பிடலாம் :

அநுத்தமா, கிருஜா, கோமதி சுப்பிரமணியம், ஆர். சூடாமணி, ராஜம் கிருஷ்ணன், வசுமதி ராமசுவாமி ரா. ஆறுமுகம் (முதலில் பி. மீனாட்சி என்ற பெயரில் எழுதியவர்) ஸ்ரீதரம் குருஸ்வாமி, கி. ரா. கோபாலன், வி. எஸ். சுப்பையா, து. ரா.

இவர்களில், கல்கிப் பத்திரிகையின் மூலம் அறிமுகமானவர்கள் யார் யார் என்பதை நிச்சயமாய்ச் சொல்ல இயலவில்லை ; ஊகமாய்ச் சொல்வது தவறாக முடியலாம். ஆகவே, கல்கி மூலம் அறிமுகமானவர் எனத் தாமாகவே பெருமையுடன் தெரிவித்துள்ள கிருஜாவை மட்டும் குறிப்பிட லாம். ஆர். ஜானகி என்ற இயற்பெயர் கொண்ட இவர், முதன் முதலாக எழுதிய ''என் அத்தை'' என்ற சிறுகதையே கல்கியில் வெளிவந்துவிட்டது. அதை அடுத்து மேலும் மேலும் அவருடைய கதைகள், அதன் சாதாரண இதழ்களிலும் மலர்களிலும் வந்தன. ''நாச்சியார் கோயில் நாச்சியார்'' என்ற அவருடைய கதை ஒன்றை மெச்சிக் கல்கி எழுதிய கடிதம் ஒன்றை, சிறந்ததொரு பாராட்டுப் பத்திரமாய் இவர் போற்றி வைத்துக் கொண்டிருக்கிறார்.

மேலே குறிப்பிட்டவர்களில், கி.ரா. கோபாலன், சித்திரக் கலையைப் பழகி எழுத்துக் கலைக்கு மாறியவர். அவருக்குக் கல்கி மாதச் சன்மானம் அளித்து, வெளியிலிருந்தபடியே சுயேச்சையாய் நிறைய எழுதச் செய்தார். இயற்

பெயருடன், ''காட்டூர் கண்ணன்'', ''கோணல்'' என்ற புனைபெயர்களிலும் கோபாலன் எழுதினார்.

வெளி எழுத்தாளர்களில், பி.எஸ். ராமையா, கு. ப. ராஜகோபாலன், ந. பிச்சமூர்த்தி ஆகியோரின் சிறுகதைகளைக் கல்கி விரும்பி வெளியிட்டார். அவர்கள் முன்பு விவாதங்களில் தம்முடன் மோதியவர்கள் என்பதைக் கல்கி மறந்து அவர்களுடைய திறமையை அங்கீகரித்தார் என்பது குறிப்பிடத்தக்கது.

சொந்தப் பத்திரிகையைத் தொடங்கிய புதிதில், தமக்கு வேண்டியவர்களில் சிலர் — அரசாங்க உத்தியோகஸ்தர்களாய் இருந்து பெருமைக்காக எழுதிக்கொண்டிருந்தவர்களில் சிலர் — தாம் விலகிய பத்திரிகைக்கு எழுதுவதைக் கல்கி விரும்பாமல் அவர்களுக்கு நேச முறையில் தடை விதித்தார். பின்னர் அப்படிச் செய்தது தகாது என்பதை அவர் உணர்ந்து, ''அதுவும் நம்ம பத்திரிகைதான், தாராளமாய் எழுதுங்கள்'' என்றார்.

## ஸி. கே. நாயுடு

- ஸி. கே. நாயுடுவுக்குக் கிரிக்கெட் மட்டும்தான் தெரியும் என்பதில்லை. பில்லியார்ட்ஸ் ஆட்டத்தில் சதுரர். டென்னிஸில் விற்பன்னர். நீண்ட தூரம் தாண்டலில் ரிகார்டு கண்டு பல வருஷங்கள் அதைச் சாதனையாக நிலைநிறுத்தியவர்.
- அவர் இந்தோர் மகாராஜாவிடம் வேலையில் இருந்தார். மகாராஜா சொல்வார்: ''நான் இந்தோரின் (indoor) அரசராக இருக்கலாம்! ஆனால் ஸி. கே. 'அவுட்டோர்' விளையாட்டுக்களில் மன்னர்!''
- ஸி. கே. நாயுடு தம் முதிய வயதில் பாரிச வாயுவினால் தாக்கப்பட்டு ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டார். அவர் ஆஸ்பத்திரியில் தம் நினைவு திரும்பப் பெற்றதும் முதலில் சொன்னது: ''நான் இன்னும் நாட் அவுட்!''
- காப்டன் ஸி. கே. நாயுடு தம் கிரிக்கெட் நண்பர் மகம்மது நிஸாரை விக்கெட் எடுக்கத் தூண்டுவார். எப்படித் தெரியுமா? இருவருக்குமே சங்கீதத்தில் அளவற்ற ஆசை. ஸி. கே. நாயுடு நிஸாரை ஒதுப்புறமாய் அழைத்துச் சென்று 'கஜல்' பாடுவார்! அவ்வளவுதான். விரைவாகப் பந்து வீசும் நிபுணர் நிஸாருக்கு வேகம் பிறந்துவிடும். விக்கெட்டு எடுத்துவிடுவார்!



முன்பு ஆனந்தவிகடனில் தீபாவளி மலர்களை வெளியிட்ட அனுபவத்தைக் கொண்டு, மேலும் மேலும் நேர்த்தியான முறையில் தமது சொந்த மலர்களைக் கல்கி வெளியிட்டார். அவற்றில் பாரதப் பண்பாட்டின் சிறந்த அம்சங்கள் எல்லாம் பதிந்திருக்கச் செய்தார். அவற்றின் மூலம் அவர் அறிமுகப்படுத்திப் புகழடையச் செய்த சித்திரக் கலைஞர்களில் ஒருவர் ஸ்ரீமதி; அவருடைய அஜந்தாப் பாணிக் கலை, தமிழக வடிவங்களில் வெளிப்பட்டுச் சிறக்குமாறு செய்தார்.

கூடுமானவரை வாழ்க்கையின் எல்லா அம்சங்களையும் தழுவியதாய்ப் பத்திரிகை இருக்க வேண்டும் என்பதே கல்கியின் நோக்கம். அந்த நோக்கம் காரணமாய்த்தான், கதைகளையும் அரசியல் கருத்துக்களையும் வெளியிடுவதோடு நில்லாமல், சமயம், கலைகள், கல்வி, விவசாயம் போன்ற துறைகளில் பயனுள்ள கட்டுரைகளை வெளியிட்டார். இலக்கியத் துறையில், — பி. ஸ்ரீ.யின் ''தமிழ் வளர்ந்த கதை'', ''பாரதி விஜயம்'' போன்ற கட்டுரைத் தொடர்களை வெளியிட்டார். தங்கம்மாள் பாரதியையும் சகுந்தலா பாரதியையும் கொண்டு அவர்களுடைய தந்தையாரின் வாழ்க்கைக் குறிப்புக்களை எழுதச் செய்தார். சங்கீத விற்பன்னர்களையும் வித்வான்களையும் கொண்டு இசைக் கலையைப் பற்றியும் கலைஞர்களைப் பற்றியும் எழுதச் செய்தார். சூலமங்கலம் வைத்தியநாத பாகவதரின் தொடர் கட்டுரைகள் இவ்வகையில் ஓர் இசைக் கலை வரலாறாகவே அமைந்துவிட்டன.

டெல்லியிலிருந்து கே. எஸ். ஸ்ரீனிவாசன் எழுதியனுப்பிய சொல் ஆராய்ச்சிக் குறிப்புக்களை — அவ்வித ஆராய்ச்சிக்கும் இடம் தரவேண்டும் என்ற நோக்கத்துடன் — ''இது என்ன வார்த்தை?'' என்ற தலைப்புடன், 1945 இதழ்களில் ஒரு தொடராக வெளியிட்டார் கல்கி. (அப்போது சொல் ஆராய்ச்சி செய்த ஸ்ரீனிவாசன், பின்னர் இலக்கிய ஆராய்ச்சியில் ஈடுபட்டு, வால்மீகியையும் கம்பனையும் இணைத்த ''காவ்ய ராமாயணம்'' என்ற நூலினை இயற்றினார்.)

தமிழகத்துத் தனிப் பண்பாட்டின் பெருமையை எடுத்துக் காட்டுவதான ''பொன்னியின் செல்வன்,'' கல்கி இதழ்களில் அத்தியாயம் அத்தியாயமாய் வந்த அதே சமயத்தில், அதன் மூலம் வெகுவாகப் பெருகிய வாசகர்களில் பலர், தனி வாழ்வில் பயன் பெற



இரண்டு விக்கெட்கீப்பர்களே ஒரு டெஸ்ட் சீரிஸில் 500 ரன்களுக்கு மேல் எடுத்திருக்கிறார்கள். அவர்கள் யார் தெரியுமா?
குண்டரன். இங்கிலாந்துக்கெதிராக 1963-64ல்.
டெனிஸ் லிண்ட்ஸே. ஆஸ்திரேலியாவுக்கெதிராக 1966-67ல்!

---

உதவிய கட்டுரைத் தொடர் ஒன்றும் வெளியாயிற்று. 'ஆரோக்கிய ரகசியம்' என்ற அத்தொடரைக் கல்கியின் வேண்டுகோளின்படி எழுதியவர், யோகாசன நிபுணர், வி. என். குமாரசுவாமி. ''யோகாசன சிகிச்சை'' என்ற அவருடைய இன்னொரு கட்டுரைத் தொடரும் பின்னர் வெளியாயிற்று.

அந்த நிபுணரிடம் பெரிதும் நம்பிக்கை கொண்ட கல்கி, தமது நெடுநாளைய ஆஸ்துமா நோயைக் குணப்படுத்திக் கொள்வதற்காக, அவரிடம் யோகாசன சிகிச்சை செய்து கொண்டார். அத்துடன், தம்மைப் போல் அல்லாது, தம் மகனாவது நல்ல ஆரோக்கியத்துடன் வாழட்டும் என்று எண்ணி, அவனுக்கும் யோகாசனப் பயிற்சி அளிக்கச் செய்தார். (ராஜேந்திரனும் அக்கறையுடன் பயின்று நாளது வரை நல்ல பலனுடன் யோகாப்பியாசங்கள் செய்து வருகிறார்.)

முற்றிப் போன நிலை காரணமாய்க் கல்கியின் நோய் குணமாகவில்லை. ஆயினும், அதன் சிகிச்சைக்காக அவர் பயின்ற சிரசாசனம், அவருடைய கற்பனை ஆற்றல் பெருகுவதற்கு உதவியாய் இருந்தது. ஒரு நாள் கைக் கடிகாரத்தைப் பார்த்து ராஜேந்திரன் கணக்குப் பண்ணிக் கொண்டிருக்க, கல்கி சிரசாசனம் போட்டார். சாதாரணமாய்ப் பத்து நிமிடம் வரை அந்த ஆசனத்தில் நிற்கக் கூடியவர், அன்று இரண்டாவது நிமிடமே அதை முடித்துக் கொண்டார். ''ஏன் இப்படி?'' என்று கவலையுடன் மகன் கேட்டதற்கு, ''நிற்க முடியாததால் அல்ல'' என்று அவர் பதில் சொன்னார். ''சேந்தன் அமுதனை ராஜாவாகப் பண்ணிவிடலாமே என்ற யோசனை தோன்றியது, அதனால்தான்'' என்றார். அந்த யோசனையின்படியே ''பொன்னியின் செல்வன்'' கதையில் ஒரு திருப்பம் கொடுத்து எழுதுவதற்காக மேஜையை நோக்கி நடந்தார். சேந்தன் அமுதனின் விதியும் மாறிற்று; அத்துடன் கதையின் கதியும் மாறிற்று.

சிரசாசனம் செய்கையிலும் சரி, கற்பனை யோகம் செய்கையிலும் சரி, எத்தனையோ விதமான காட்சிகளும் நிகழ்ச்சிகளும் கல்கியின் மனத்தில் தோன்றிக் கொண்டேயிருந்தன; அவற்றைத் தம் கதைகளில் பயன்படுத்திக் கொள்ளவும் செய்தார். மிகத் துணிச்சலான கதாசிரியர்கள் கையாளும் கட்டங்களும் அவற்றில் பல உண்டு; ''பொன்னியின் செல்வன்'' நாவலில் அவ்வித கட்டங்கள் அதிகமாகவே உண்டு. ஆனால் அவற்றை அவர் எவ்வாறு எழுதினார்? தமக்குத் தாமே தணிக்கையாளராய், பண்பாட்டுக் காவலராய் இருந்து கொண்டு, அழகுப் பண்புடன் எழுதினார். (தொடரும்)

## ஹாக்கியில் பாக்ஸிங்!

அந்தக் காலத்தில் ஹாக்கி டெஸ்ட்கள் சென்னைக்கும் மைசூருக்கும் இடையே நடக்கும். சென்னையிலும் பெங்களூரிலுமாக மாறி மாறி நடைபெறும். மிகச் சிறந்த ஹாக்கி ஆட்டத்தை அந்தப் பந்தயங்களில் காண முடிந்தது. ஆங்கிலோ இந்தியர்களுக்கு உடல் வலிமையும் ஆட்டத் திறமையும் மிகுதியாக இருந்தன. இந்தியர்களிடம் ஆட்டத் திறன் உண்டு. ஆனால் தாக்குப்பிடிக்க முடியாது. எம். ஸி. ஸி. டோர்னமெண்டின் போது ஒரு மறக்க முடியாத சம்பவம். பெங்களூர் கோஷ்டியைச் சேர்ந்த கிருஷ்ணனுக்கும் டெலிகிராப் கோஷ்டியைச் சேர்ந்த கில்பெர்ட்டுக்கும் நடைபெற்ற 'பாக்ஸிங்!' உற்சாகமடைந்த ஹாக்கி ரசிகர்கள் மைதானத்தினுள்ளே புகுந்து விட்டனர். பந்தயம் ஒத்திவைக்கப்பட்டது. போலீசார் ஹாக்கி ரசிகர்களை வெளியேற்றும்படியாயிற்று. ஸோப் வரை ஆட்டக்காரர்களுக்குப் போலீஸார் பாதுகாப்பாகச் சென்றனர்!

மறுபடியும் பந்தயம் நடந்தபோது ஹாக்கி ரசிகர்கள் மாட்ச் காண அனுமதிக்கப்படவில்லை. இதுவே ஹாக்கி சரித்திரத்தில் முதல் தடவையாகவும் கடைசித் தடவையாகவும் ரசிகர்கள் இல்லாமலே நடைபெற்ற பந்தயம்! இந்த மறு ஆட்டத்தில் பெங்களூர் இந்தியன் கோஷ்டியை டெலிகிராப் கோஷ்டி வென்றது.

— கே. எஸ். ரங்காராவ்



○ மாண்ட்ரியால் ஒலிம்பிக்கில் தயாராகியுள்ள ராட்சசக் கடல் சிப்பி போன்ற தோற்றமுடைய ஒலிம்பிக் ஸ்டேடியம்.

○ மாண்ட்ரியால் ஒலிம்பிக் தொடருவதற்கு முன்னால் 'வெள்ளோட்டம்', ப்ரீ ஒலிம்பிக்கில் ஓட்ட வீரர்கள்.

○ பெண்களுக்கான 'ப்ரீ ஒலிம்பிக்' வாலிபால் போட்டி உக்ரமாக நடந்து கொண்டிருக்கிறது !

○ ப்ரீ ஒலிம்பிக்கில் கராத்தே 'ஜூடோ' பந்தயங்களில் கலந்து கொண்ட சாம்பியன்கள்.

○ கனடாவின் குடியேற்றத்துக்கு மூலகாரணமான 'பீவர்' ஒலிம்பிக் பந்தய முத்திரையாகவும் இடம் பெற்றுவிட்டது !








□ 1976 ஒலிம்பிக் கனடாவில் மாண்ட்ரியால் நகரில் நடக்கப்போகிறது.

இந்த ஒலிம்பிக்கின் சின்னம் பீவர் என வழங்கும் மிருகம். இது நீரில் பிரமாதமாக நீந்தும். நிலத்தில் குழி பறித்துப் பதுங்கி வாழும். இதனைச் சின்னமாகத் தேர்ந்தெடுப்பானேன்?

வட அமெரிக்காவில் ஐரோப்பியர் புகுந்து புதுப் புதுப் பிரதேசங்களைக் கண்டுபிடித்து ராஜ்யத்தை விஸ்தரிக்க இந்த பீவரே காரணம். அதன் புசுபுசு என்றிருக்கும் குளிருக்கு அடக்கமான தோலுக்கு அத்தனை கிராக்கி. அதில் உடை தயாரித்து அணியும் ஆசையைத் திருப்திப்படுத்தவே ராஜ்ய விஸ்தரிப்பு நடந்து கனடா தேசம் உருவாயிற்று.

□ பத்தொன்பது மாடி 'ஒலிம்பிக் கிராம' கட்டடம் விளையாட்டு வீரர்களுக்குச் சௌகரியமாகத் தங்க வசதி செய்து தருகிறது. ஒலிம்பிக் விளையாட்டு ஸ்டேடியம் 50 ஹெக்டர் நிலப் பரப்பில் கடல் சிப்பி போன்ற அமைப்பில் உருவாகியுள்ளது. 56,000 பேர் வசதியாக அமரும் ஒலிம்பிக் ஸ்டேடியத்தில் சில மாறுதல்களைச் செய்வதால் ஒலிம்பிக்கின்போது 70,000 பேர் அமர்ந்து பார்க்க முடியுமாம்.

□ 1975ம் ஆண்டில் மாண்ட்ரியாலில் நான்கு வாரங்கள் ஒத்திகை பார்ப்பது போல், ப்ரீ ஒலிம்பிக் பந்தயங்கள் நடைபெற்றன. நூற்றுக் கணக்கான உலக விளையாட்டு வீரர்கள் இந்தப் பந்தயங்களில் பங்கு பற்றினர்.

□ மாண்ட்ரியால் ஒலிம்பிக்கிலேதான் முதன் முதலாகச் செயற்கை ஹாக்கி மைதானத்தில் ஒலிம்பிக் ஹாக்கிப் பந்தயம் நடைபெறப்போகிறது.

படங்கள் உதவி: 'ஜம்பால்' பத்மநாபன்

# விளையாடுகிறார் வள்ளியப்பா!



கேரம் விளையாட்டில்
குழந்தைகள் அக்கறை.

சிவுன், ஸ்கர்ட், பாவாடை, தாவணி என்று விதம் விதமான வண்ண உடைகளில் அழகுப் பதுமைகளாகப் பெண்கள்! நிஜாரும், சட்டையுமாக 'டக்'காக உடையணிந்திருந்த பையன்கள்! இவர்களுக்கு இடையே அமர்ந்திருந்த திரு வள்ளியப்பாவைக் கண்டு பிடிப்பது சற்றுச் சிரமமாகத் தான் இருந்தது. குழந்தைகள் முகத்தில் ஆனந்தம்! வள்ளியப்பாவின் முகத்தில் அதைவிட ஆனந்தம்! இதைக் கண்டதும் என் மனத்திலும் ஆனந்தம் பொங்கியது.

எத்தனை 'நர்ஸரி ரைம்கள்', எத்தனை பாடல்கள், எத்தனை ஆடல்கள்... அப்பப்பா! குழந்தைகளுக்கென்றே ஏற்பட்ட ஒரு குதூகல உலகத்தில் வலைய வந்தேன்—இத்தனை ஆட்ட பாட்டங்களுக்கு இடையில், குழந்தைகள் ஒரு சிறு சோக நாடகமும் நடத்திக் காட்டினர். ''மனித தெய்வத்துக்கு ஒரு மாலை'' என்பது நாடகத்தின் பெயர். காந்தி மகானை நினைவில் நிறுத்தும் வண்ணம் பூமாலையை அடிப்படையாகக் கொண்டே ஓர் உரையாடலைத் தொகுத்து அஞ்சலி செலுத்தியிருக்கிறார் குழந்தைக் கவிஞர் திரு வள்ளியப்பா. அது சென்னை வானொலி நிலையத்தில் ஏற்கனவே ஒலிபரப்பானது. அதை அடிக்கடி இந்தக் குழந்தைகள் நடித்து மகிழ்கின்றனர். நன்கு மெருகேறியிருக்கிறது.

திரு வள்ளியப்பா ஆர்வத்தோடு நடத்தி வரும் ''கவிமணி குழந்தைகள் சங்கம்'' 7-11-74 அன்று தொடங்கப்பட்டது. அன்று வள்ளியப்பாவின் பிறந்த நாள்.

''கவிமணி குழந்தைகள் சங்கம் சிறுவர் சிறுமியருக்கான ஒரு சிறு அமைப்பு. பல்வேறு குடும்பங்களைச் சேர்ந்த பல குழந்தைகளை என் இல்லத்திலேயே சேர்ந்து பழக, விளையாட வாய்ப்பு அளித்திருக்கிறேன். இக்குழந்தை

'மியூசிக்கல் சேர்' போட்டியில் பெண்கள்.





வள்ளியப்பா 'வில் பயிற்சி' தருகிறார்

களை அழைத்துக் கொண்டு பல இடங்களுக்கும் போய்ப் பல கலை, பொழுதுபோக்கு நிகழ்ச்சிகளை நடத்தலாம். அத்துடன் ஒரு குழந்தைக்கும் இன்னொரு குழந்தைக்கும் நல்லதொரு நட்பு ஏற்படுகிறது. சின்னஞ் சிறு வயதிலேயே ஏற்படும் இந்த அன்புப் பரிமாற்றம் மிகவும் பலனுள்ளது. மனிதாபிமானம் மிக்க குடிமக்களாக வளரப் பெரிதும் உதவும்.''

வள்ளியப்பா, குழந்தைகளுக்குக் கதை சொன்னார்; புதிர்கள் போட்டார், பாட்டுக்கள் பாடினார். பின்னர் குழந்தைகள் எங்களுக்குக் கதை சொன்னார்கள். வள்ளியப்பாவோடு விளையாடினார்கள்.

ஒரு சுவையான பட்டிமன்ற விவாதம் நடந்தது - ''இட்லியா? தோசையா? எது சிறந்தது?''

''நீரிலேயே வெந்து, நீரிலேயே உருவாகி, நீரைப் போலவே பரிசுத்தமானது, இட்டிலி. அதை யாரும் சாப்பிடலாம் — அதற்கு எதையும் தொட்டுக் கொள்ளலாம். நோயாளிக்கும் கெடுதல் பண்ணாதது. நல்ல ஆரோக்கியம் உள்ளவனும் சாப்பிடலாம்; இட்டிலி தயாரிப்பில் எண்ணெய் சேராதது ஒரு முக்கியமான விஷயம். ஆகவே இட்டிலியின் தனித் தன்மை தோசைக்குக் கிடையாது. இட்டிலியே சிறந்தது''. இது இட்டிலிப் பிரியர்களின் வாதம்.

தோசைப் பிரியர்களோ, ''மாசு மறுவற்ற பூரண சந்திரனைப் போன்ற தோசைக்கு மாசு கற்பிப்பவர்களைப் பற்றி என்னத்தைச் சொல்ல? அவர்களது அறியாமைக்காக அநுதாபப்படுகிறோம். தோசைக்குத் தொட்டுக் கொள்ள இதுதான் வேண்டும் என்பதில்லை. அது எதனுடனும் சேர்ந்து தன் ருசியைப் பெருக்கிக் கொள்ளும். தோசை தயாரிப்பில் எண்ணெய்



பந்து விளையாடுவோமா? என்கிறார் குழந்தைக் கவிஞர்.

சேருவதால் கெடுதல் என்று நினைப்பது மடமை. தோசைக்கு ஆசைப்படாதவர்களே கிடையாது...'' என்று தோசையின் சிறப்புக்களை எடுத்துரைத்தார்கள்.

உடனே இதற்கு எதிர் வாதம் பிறந்தது: ''தோசை வார்ப்பது சிரமம். பக்கத்திலேயே இல்லாவிட்டால், அந்தப் பூரணச் சந்திரன் அமாவாசையாகி விடும்! அதாவது தீய்ந்து கருகிப் போய்விடும். இட்டிலி தயாரிப்பதும் சுலபம், சாப்பிடுவதும் சுலபம், சீரணிப்பதும் சுலபம்...''

இப்படி ''இட்டிலியா, தோசையா?'' விவாதம் இட்டிலி — தோசையைப் போலவே சுவையாக வளர்ந்து கொண்டே போய்க் கடைசியில் இட்டிலியே வென்றது!

குழந்தைகள் அற்புதமாய் விவாதத்தில் பங்கு கொண்டார்கள். இந்த விவாதம் ஏற்கெனவே பெரிய பட்டி மன்றத்தில் நடந்ததுதான். இன்று ''ஒன்ஸ் மோர்!''

திரு வள்ளியப்பா தமது அண்ணாநகர் இல்லத்தில் குழந்தைகளுக்காகவே ஒரு சிறு நூல் நிலையம் வைத்திருக்கிறார். குழந்தைகள் தங்களுக்கு வேண்டிய புத்தகங்களைப் படிக்க எடுத்துச் செல்கின்றனர்.

குழந்தைப் பாடல்கள் பாடுவதில் வெள்ளி விழாக் கண்ட வள்ளியப்பா குழந்தைகளைப் போலவே வெள்ளி மணிநாதச் சிரிப்புடன் பழகும் சீரிய பண்புடையவர். 'இன்றைய குழந்தை நாளை வருங்காலப் பிரஜை' என்பதைச் சதா நினைவில் கொண்டு குழந்தைகளுக்கு ஏதாவது செய்யத் துடிப்புடன் இருக்கிறார். கவிமணி குழந்தைகள் சங்கம் கூடும் நாட்களில் வள்ளியப்பாவின் வீடு மலர் முகங்களுடன் கூடிய வண்ணப் பூங்காவாக மாறி விடுகிறது!

— விஜயம்

படங்கள்: உத்ரா



'பல்லவர் சிறுவன்' கதையை 'ஆக்ஷனோடு' கூறுகிறார் கவிஞர்.

# கிரிக்கெட்டில் பௌன்ஸர்கள் தேவையா?

உடலில் இடுப்புக்கு மேற்பட்ட பகுதி எதையேனும் தாக்கும்படி வீசப்படும் பௌன்ஸர்களை 'நோபால்'களாகக் கருதவும், ஓர் இன்னிங்கிஸில், அத்தகைய பந்துகள் நான்கு ஐந்துக்கு மேல் வீசுபவர்களை, மேலும் பௌல் செய்யாமல் தடுக்கவும் அதிகாரம் அம்பயர்களுக்கு வழங்கினால், அபாயகரமான பௌன்ஸர்களைத் தவிர்க்கலாம்.

கே. வி. ராஜகோபாலன், சென்னை

□ கண்டிப்பாக பௌன்சர்கள் தேவை. கிரிக்கெட் 'மேன்லி கேம்' (Manly game) ஆகக் கருதப்படுவதற்குக் காரணம் லாயிட், பிரெடெரிக் போன்றோர் அசுர பலத்துடன் ஸிக்ஸர்கள், எண்ணிக்கையற்ற






ஹிந்துஸ்தான் டைம்ஸில் சுதிர்தர் கார்ட்டூன்

பௌண்டரிகள் அடித்து அதிரடிப்பது மட்டுமின்றி, தாம்ஸன், ராபர்ட்ஸ், ஹோல்டிங் போன்றோரின் பௌன்சர்களோடு கூடிய மின்னல் வேகப் பந்து வீச்சும்தான். பௌன்சர்கள் இல்லாத 'பாஸ்ட் பௌலிங்' விஷப்பல் பிடுங்கப்பட்ட நல்ல பாம்பைப் போன்றது. — ஜி. தர்மர், ஸ்ரீவில்லிப்புத்தூர்

இட்ட நிற்கும் ஃபீல்டர்களான ஸோல்கர், அபீத் அலி, வேங்கடராகவன் முதலியோரை வைத்துக் கொண்டு அஜித் வாடேகர் இந்தியாவுக்கு வரிசையாக மூன்று 'சீரிஸ்' ஜெயித்துக் கொடுத்தார். அப்பொழுது நாம் அவர்கள் உயிர்களுக்கு ஆபத்து ஏற்படுவது பற்றி யோசித்துப் பார்க்கவில்லை. ஏனென்றால், அப்போது நாம் ஜெயித்துக் கொண்டிருந்தோம். இப்போது நாம் தோற்கும்போது நம் பாட்ஸ்மன்கள் மீது திடீரென்று கரிசனம் வந்துவிட்டது.

எம். கே. கிருஷ்ணன், வேலூர்

பௌன்ஸர்கள் போடுவதில் தவறில்லை, இவ்வளவுதான் போட வேண்டும் என்ற விதியை மீறலாகாது. ஆனால் யார் விதியை (Laws) மதிக்கிறார்கள்? சமீபத்தில் நடந்து முடிந்த நான்காவது டெஸ்டில், திட்டமிட்டுத் தாக்கினார்கள். நம் மானேஜர் உம்ரிகர், அம்பயரிடம் புகார் செய்த போது, மேற்கிந்தியத் தீவு கோஷ்டி மானேஜர் அலட்சியமாக ஒரு 'வில்லன்' சிரிப்புச் சிரித்தார்.

முதல் மூன்று டெஸ்டுகளில் போடாமல் இந்த டெஸ்டில் மேற்கிந்தியத் தீவு கோஷ்டியினர் போட்டதன் காரணம், எப்படியாவது வென்று ஆஸ்திரேலியாவில் சமாதியான 'உலகப் புகழை' மீட்டுக் கொள்ள வேண்டும் என்பதே.

நம்மிடம் ஆளில்லை. நம்மைத் தாக்கினார்கள். எனவே, இப்போதுள்ள சூழ்நிலையில் 'பௌன்ஸர்' போட்டாலும், அதை அடித்தான் வெல்ல வேண்டும்.

வி. மகாலிங்கம், சென்னை

□ அதிகப்படியான பௌன்சர்களைத் தடை செய்யத்தான் கிரிக்கெட்டில் சட்டம் இருக்கிறதே தவிர, பவுன்சரையே தடை செய்யச் சட்டம் ஏதுமில்லை. பௌன்சருக்குத் தக்க பதிலாக இருக்கும் 'ஹுக்' (hook) அடியால் பந்தைப் பவுண்டரியை நோக்கி அனுப்பினால் கூடியிருக்கும் மக்கள் ஆர்ப்பரிக்கின்றனர்; அடுத்த முறையும் பவுன்சர் வராதா என்று எதிர்பார்க்கின்றனர். ஆட்டக்காரர் அடிபட்டாலோ 'ஏன் இந்த மாதிரியான பந்து வீச்சு? இதைக் கிரிக்கெட்டிலிருந்து ஒழிக்க வேண்டும்' என்று கூக்குரலிடுகின்றனர். ஆக, ஒரேவிதமான பந்துக்கு இரண்டு நேர் எதிரான விளைவுகள். — கி. பாலு, சென்னை

ஓர் ஆட்டக்காரரின் திறமை, தன்னை வீழ்த்த வரும் அதி வேகப் பந்து வீச்சைச் சமாளித்து, அதையே தனக்குச் சாதகமாக மாற்றி, தண்டிப்பதில் (Punish) இருக்கிறது. நம் ஆட்டக்காரர்கள் அந்தத் திறமையைப் பெற, நம் 'பிட்ச்'கள் மாற்றப்பட வேண்டும். இன்று சுழல் பந்து வீச்சில் பிரமிக்கத்தக்க வகையில் முன்னணியில் இருக்கும் இந்தியா, 'விரைவு' பந்து வீச்சிலும் அந்த நிலையை அடைய வேண்டும்.

நாநா, நாயுடு பேட்டை

□ இன்றைய கிரிக்கெட் ஆட்டத்தில், ஆட்டத்தைப் பார்ப்பவர்களுக்கு, காமெண்டரி கேட்பவர்களுக்கு உற்சாகத்தையும், விறுவிறுப்பையும் அளிப்பது பௌன்ஸரே. இந்த வருடம் நடந்த ஆஸ்திரேலிய மேற்கு இந்திய கிரிக்கெட் தொடர் விறுவிறுப்பாக

இருந்ததற்குக் காரணம் பௌன்ஸரே. ஆகையினால் கிரிக்கெட்டுக்கு உற்சாகத்தையும், விறுவிறுப்பையும் அளிக்கும் பௌன்ஸர் கிரிக்கெட்டுக்குத் தேவையே.

என். சிவகுமார், திருபுவனம்

நம் நாட்டில் அதிக வேக அல்லது வேகமாகப் பந்து வீசும் ஆட்டக்காரர்களை உருவாக்காத காரணத்தால், நம் நாட்டின் தலைசிறந்த கிரிக்கெட் ஆட்டக்காரர்கள் (பாட்ஸ்மன்) பௌன்ஸர்கள் ஆடிப் பழகாத நிலையில் தலையிலும் ''நெஞ்சிலும்'' அடிபட்டுக்கொள்கிறார்கள். ''பௌன்ஸர்கள்'' கிரிக்கெட்டுக்கே தேவையா என்னும் கேள்வி எழுகிறது.

இருதரப்பிலும் பாஸ்ட்பௌலர்கள் சரிசமமாக இருந்து விட்டால் பௌன்ஸர்கள் மிருகத்தனமாக இராமல் தேவைக்கு உட்பட்டே இருக்கும். காரமில்லாச் சாப்பாட்டுக்கு ருசியில்லையென்றால் பௌன்சர்கள் இல்லாக் கிரிக்கெட்டுக்குக் கவர்ச்சி இல்லை.

வி. ராமச்சந்திரன், சென்னை

☐ பந்து வீச்சாளர்களின் ஜீவகாருண்யத்தை எதிர்பார்த்துத்தானா என்ன, பாட்ஸ்மேன்களெல்லாம் ஆட வருகிறார்கள்? பௌன்சர்களை எதிர்த்துத் துணிந்து ஆடத் துணிவில்லாதவர் ஆடவரக் கூடாது.

க, விசுவநாதன், சென்னை-44

என் வீட்டுக்காரர் பௌன்ஸர்கள் தேவை என்று கூறுகிறார். இந்த ஆண்கள் எப்போதுமே இப்படித்தான். நெஞ்சில் ஈவிரக்கமே கிடையாது. கை கால்களை உடைப்பதும் மண்டையைப் பிளப்பதும்தான் விளையாட்டா? படாத இடத்தில் பட்டு உயிருக்கே ஆபத்து உண்டாகி விட்டால் பெற்றவர்களுக்கு எப்படி இருக்கும்? அல்லது கட்டியவர்கள்தான் எப்படித் தாங்கிக் கொள்வது?

அந்தப் பேட்ஸ்மென்களைப் பெற்ற தாய்மார்கள் — கட்டிய மனைவிகள் — பெற்ற குழந்தைகளுக்காகவாவது பௌன்ஸர்கள் வேண்டாம்....வேண்டாம்....

வசந்தி சேகர், சிறுமுகை

☐ கிரிக்கெட்டில் பௌன்ஸர்கள் தேவை என்றால் கால் பந்தாட்டத்திலும், ஹாக்கியிலும் விளையாடுபவர்கள் ஒருவர் மற்றவர் மீது குறி வைத்து, பந்தை உதைத்தோ, அடித்தோ அவர்களைப் படுகாயப் படுத்தி வீழ்த்தி வெற்றி கொள்வதும் முறையென உண்டாகலாம் அல்லவா?

பௌன்ஸர்கள் தேவைதான் என்றால், குஸ்தி, குத்துச் சண்டை, இவைகளைப் போல, ''பௌன்ஸர்கள் யுத்தம்'' என்று ஒன்று தனியாக வைத்துக் கொள்ளலாமே! — வி. ஜி ரகுநாதன், பெங்களூர்

இந்தப் பயங்கர பௌன்ஸர் போரை நிறுத்த உடனே உலகக் கிரிக்கெட் நாடுகள் முயற்சி எடுத்துக் கொள்ள வேண்டும். இங்கிலாந்து, ஆஸ்திரேலியா போன்ற நாடுகளில் பௌன்ஸர்களிடமிருந்து உடலைப் பாதுகாக்க மார்பு, தலை போன்ற உறுப்புக்களுக்குக் கவசம் (Shield) தயாரிக்கிறார்களாம். இந்த ரீதியில் போனால் பாட்ஸ்மென்கள் போர்க்களத்துக்குப் போவது போல் உடல் முழுவதும் கவசம் அணிந்துதான் 'பாட்' செய்ய வேண்டி



ஹோல்டிங்

வரும். அத்தகைய ஒரு நிலை வந்தால் Gentleman game என்று ஒரு காலத்தில் போற்றப்பட்ட கிரிக்கெட் காட்டு மிராண்டித்தனமான ஆட்டமாக மாறிவிடும்.

என். ஆர். ரகு, சென்னை-28

☐ மிருகங்களுக்குக் கொடுமை செய்வதைத் தடுக்க எஸ். பி. ஸி. ஏ. இருப்பதைப் போல கிரிக்கெட்டில் எஸ். பி. ஸி. பி. (Society for the Prevention of Cruelty to Batsmen) என்று ஆரம்பித்து, அந்தச் சங்கம் கொடுமையான பம்பர், உடல் தாக்கும் பந்து வீச்சுகளுக்கு எதிர்ப்புக் கண்டனக் குரல் எழுப்பித் தடுக்கலாம் என்று தோன்றுகிறது!

உக்ரப் பந்து வீச்சில் 'பாஸ்ட் பௌல'ரின் கருத்து விக்கெட்டே தவிர உடலோ, எலும்போ அல்ல என்றிருக்க வேண்டும். லியரி கான்ஸ்டன்டைன் சொன்ன பொன்மொழிகளை இங்கு தருகிறேன்: ''உக்ரப் பந்து வீச்சு (Fast Bowling) கிரிக்கெட்டுக்கு உப்பு போல. உப்பு அதன் தன்மையை மறந்து விட்டால், அப்புறம் அதை உப்பிட்டு என்ன பயன்?''

வி. பட்டாபிராமன்,
(உதவித் தலைவர், தமிழ்நாடு கிரிக்கெட் சங்கம்)

சண்டையில் பாச பந்தம் கொண்டாடக் கூடாது என்பதும், உரலில் தலை கொடுத்தால் உலக்கைக்குப் பயப்படக் கூடாது என்பதும் பௌன்ஸர்கள் தேவை என்பவர்களின் வாதம்.

ஆனால் எந்த ஆட்டத்திலும் தார்மீக நியதிகள் உள்ளன. போட்டி என்பது ஒருவரின் திறமையைக் காட்டுவதற்கே அன்றி எதிராளிகளின் அங்கங்களை உடைப்பதற்கு அல்ல. —பி. சீனிவாசன், சென்னை-7

☐ பார்ப்பவருக்கும் சரி, விளையாடுபவருக்கும் சரி விளையாட்டு பயங்கர உணர்ச்சிகளை உண்டாக்கக் கூடாது. பௌன்ஸர்கள் ஆபத்தை விளைவிப்பதால் அவை தேவையில்லை. விளையாட்டு 'த்ரில்லிங்' ஆக இருக்க வேண்டியதுதான்; ஆனால் ''கில்லிங்''காக இருக்கக் கூடாது. — யு. வைத்தியராமன், நெய்வேலி

விளையாட்டு என்றாலே ஆபத்துக்களும், அற்புதங்களும் நிறைந்ததுதான். காண்ட்ராக்டர், கிரிஃபித் வீசிய பந்தில் மோசமாக அடிபட்ட நிகழ்ச்சியை ஆபத்துக்கு உதாரண

---

(இந்த விவாத மேடையில் வாசகர்கள் மிக அதிகமான ஆர்வம் காட்டியுள்ளனர். ஏராளமான கடிதங்கள் வந்து குவிந்துள்ளன. பௌன்ஸர்கள் வேண்டும் என்போரும், வேண்டாம் என்போரும் ஏறத்தாழ சம அளவில் உள்ளனர். — ஆசிரியர்)

மாகக் கொள்ளலாம். அவ்வாறு வீசிய ஹால், கிரிஃபித் பந்துகளிலேயே இரு முறை பலமாக அடிபட்டும் விடாமல் ஆடி சதம் எடுத்த கௌட்ரியின் ஆட்டத்தை அற்புதத்துக்கு உதாரணமாகக் கொள்ளலாம். பௌன்ஸர்கள் ஆபத்து நிறைந்தவை என்கிறார்கள். ஆனால் இதே பௌன்ஸர்களை எதிர்த்து ஆடிச் சதங்கள் பல அடித்தவர்கள் இல்லையா?

பௌன்ஸர்கள், ஆட்டத்தை விறுவிறுப்புடனும், பரபரப்புடனும் கொண்டு செல்ல அவசியமே. — கே. ரகுராமன், தூத்துக்குடி

□ பௌன்ஸர்கள் மூன்று விதம். ஒன்று, ஆப் ஸ்டம்புக்கு வெளியில். இரண்டு, லெக் ஸ்டம்புக்கு வெளியில். மூன்று, பாட்ஸ்மன்னின் உடலைக் குறி பார்த்து வீசும் பௌன்ஸர். மூன்றாவது விதமான பௌன்ஸர் பாட்ஸ்மன்னின் உயிருக்கே அபாயம். இதைத்தான் அறவே ஒழிக்க வழி தேட வேண்டும்.

க. நாராயணஸ்வாமி, ஹைதராபாத்

'பௌன்ஸர்' பந்து பட்டதினால் ஆஸ்திரேலிய ஆட்டக்காரர் ஒருவரின் மரணம், நியூஜிலந்தைச் சேர்ந்த ''சாட்பீல்டு'' என்பவர் செத்துப் பிழைத்தது; இந்திய ஆட்டக்காரரான ''நாரி கண்ட்ராக்டர்'' உயிர் தப்பியது ஆகிய சமீப காலத்திய நிகழ்ச்சிகள் இதன் விபரீத விளைவுகளை உள்ளங்கை நெல்லிக்கனி போல் எடுத்துக் காட்டுகின்றன. உலக ஆட்டக்காரர்களிடையே நிலவி வரவேண்டிய சிநேக பாவத்தைக் கெடுக்க வல்ல இந்த 'வினை' வேண்டவே வேண்டாம்.

டி.வி. கிருஷ்ணன், போபால்

□ ஆண்டுதோறும் ஒரு டெஸ்ட் தொடர் முடிந்ததும் நாமும் வேகப் பந்து வீச்சாளர்களையும் அவர்களை சமாளிக்கக்கூடிய விக்கெட்டுகளையும் உருவாக்குவோம் என்று சபதம் ஏற்கிறோம். ஆனால் நடப்பதென்ன? நம் வேகப் பந்து வீச்சாளர்கள் எண்ணி தலா இரண்டு-அதிகபட்சம் நான்கு ஓவர்கள் பௌல் செய்ததும் பந்து அவர்களிடமிருந்து பறிக்கப்பட்டுத் தரையில் தேய்க்கப்பட்டு, சுழற்பந்து வீச்சாளர்கள் வசம் ஒப்புவிக்கப்படுகிறது. தரமான வேகப் பந்து வீச்சாளர்கள் எப்படிக் கிடைப்பார்கள்?

ஓர் உருப்படியான யோசனை: வேகப் பந்து வீச்சாளர்களை எதிர்த்து ஆடும்போது பாட்ஸ்மென் தலைக்கு ஹெல்மெட் அணிந்தால் என்ன?

ஏ. கே. பிரசாத், சென்னை-4

'உலகக் கோப்பை' ஒரு நாள் விளையாட்டுக்களில் இத்தகைய பந்து வீச்சாளர்கள் மிக அவசியம். அணுகுண்டு தயாரித்தோம். பாஸ்ட் பௌலரைத் தயாரிக்க முடியாதா?

இரா. ஸ்ரீதர், மதுரை

□ ஒரு சுழல் பந்து வீசுபவர் நான்கு பேரை பேட்ஸ்மெனுக்கு வெகு அருகில் நிற்க வைத்து மனோரீதியான ஒரு பலவந்தத்தை உண்டாக்குவதை யாரும் 'இன்டிமிடேடரி'யாகக் கருதுவதில்லை. கிரிக்கெட் என்பது ஒரு விளையாட்டாக மட்டுமின்றிப் பல்லாயிரக் கணக்கானோர் ரசிக்கும் ஒன்றாகவும் பெரும் பணமும் புகழும் நடமாடும் இடமாகவும் மாறிவிட்டது. மேலும் இதில் வெற்றி தோல்வி என்பது கௌரவப் பிரச்னையாகி விட்டது. இந்நிலையில் வெற்றி என்பதைக் குறிக்கோளாகக் கொண்டு ஆடும் குழு பௌன்ஸர் போன்ற உத்திகளைக் கையாள்வதில் தவறில்லை. மாறிவந்துள்ள சூழலின் வெளிச்சத்தில் ஆராய்ந்தால் பௌன்ஸரின் நியாயத் தன்மை புலப்படும். அதைக் கண்மூடி எதிர்ப்பதைத் தவிர்த்து, திறமையாகச் சமாளிக்கும் வழிமுறைகளை நாம் ஆராய வேண்டும்.

வி. கே. ஸ்ரீதர், காஞ்சிபுரம்

காரமான ஆவக்காய் ஊறுகாயைச் சாப்பிட்டால் மூக்கிலும் நாக்கிலும் கண்ணிலும் தண்ணீர் கொட்டத்தான் செய்யும். ஆனால் ஆவக்காய் வேண்டாம் என்று எந்த நாவுக்கு அடியாரும் கூறமாட்டார். ஆவக்காய் போலத்தான் பௌன்ஸரும்.

பௌன்ஸரை ஆடுவது ஒரு வித்தை. பாட்டிங் என்ற கலையில் அதுவும் ஒரு கிளை. 'டைமிங்' இருந்தால் பௌன்ஸரை 'சிக்ஸர்' அடிக்கலாம். தவறினால் பௌண்டரியிலோ அருகிலோ 'காட்ச்' கொடுத்து 'அவுட்' ஆகலாம். பந்து வீசுவதில், அதிலும் விசைப் பந்து வீச்சில், பௌன்ஸர்கள் ஒரு தனி வகை. அவ்வளவுதான்.

'அளவுக்கு மீறினால் அமிர்தமும் நஞ்சு' என்பார்கள். பௌன்ஸர்களையே விடாது வீசினால் விளையாட்டு வினையாகிவிடும்.

பௌன்ஸர்கள் தேவைதான். ஆனால் 'தலை' வேதனையாகிவிடக் கூடாது.

வி. ரமேஷ், கோவை

□ ''விருந்திலும் சரி, விடுதியிலும் சரி, ஸ்வீட்டே கூடாது யாருக்கும்!'' என்றாலும் சர்க்கரை வியாதிக்காரன். ''கண்ணாடியே கூடாது'' என்றாலும் கண்ணே இல்லாதவன்! அப்படித்தான் இருக்கிறது நாம், ''பௌன்ஸரே கூடாது'' என்று அலறுவதும். ஒரு ரங்காச்சாரி, மீடியம் பேஸ் தவிரவே — பட்கர் ஜோடிக்குப் பிறகு அதிகாரி, உம்ரிகர் போன்ற இருப்பைப் பூக்களை வைத்தே 'ஓப்பன்' செய்துவந்த நாம் இன்னும்கூட உலகத் தரத்தில் ஒரு வேகப் பந்து வீச்சாளரை உருவாக்கவில்லை. பௌன்ஸரைக் கண்டு மட்டும் பொங்கி எழுகிறோம்.

ஆர். பி. சாரதி, காஞ்சிபுரம்

கிரிக்கெட்டில் பௌன்சர்கள் தேவையா?

இப்படியே தொடர்ந்து கேட்டுக் கொண்டே போனால்....?

புதிய பந்து (New Ball) தேவையா? வேக வீச்சாளர்கள் தேவையா? லெக்பிரேக் தேவையா?

....என்று அடுக்கிக் கொண்டே போகலாம். அடுத்த வீட்டு அம்பி ஆடுவதுபோல் கிரிக்கெட் பந்துக்குப் பதில் ஒரு டென்னிஸ் பந்து வாங்கிக் கொடுத்துவிடுங்கள்! பிரச்னையே இருக்காது.

வி. சீனிவாசன், சென்னை-50

□ பிச் எப்படித் தயாரிக்கப்பட்டிருக்கிறது என்பதைப் பொறுத்தே பௌன்ஸர் விவகாரம் தோன்றுகிறது. வேகமாகப் பந்து வீசுபவர்களுக்கு உதவியாக பிச் தயார் செய்தால்தான் அவர்கள் அதை அதிகமாக உபயோகிக்க முற்படுவார்கள். பீமர், யார்க்கர் போடுவதைக் காட்டிலும் பம்பர் போடுவது அவர்களுக்கு அதிக உற்சாகம் உண்டாக்கும். இந்தியா போன்ற நாட்டில் வெஸ்ட் இண்டீஸ் ஆஸ்திரேலியா நாட்டு வேக பந்து வீச்சாளர்கள் தோன்றுவதில்லை. இங்கு தயாரிக்கப்படும் பிட்சுகள் நம்முடைய அஸ்திவாரமான சுழல் பந்து வீச்சாளர்களின் கையைப் பலப்படுத்தும் விதமாகவே அமைகின்றன. ஆகவேதான் நம் நாட்டு வீரர்கள் வெளி நாடுகளில் இந்த பம்பர் விஷயத்தில் பிரகாசிப்பதில்லை.

பாஷ்யம், சென்னை-57

# வளர்ச்சியின் ஒவ்வொரு கட்டத்திலும் உடம்புக்குத் தேவை காலஷியம்-ஸாண்டோஸ்®



கர்ப்பத்தின் ஆரம்பக் கட்டத்திலேயே குழந்தையின் பற்களிலும் எலும்புகளிலும் அமையத் தொடங்குகிறது காலஷியம். கருவிலுள்ள குழந்தைக்கு அதிகப்படி காலஷியம் அவசரமாகத் தேவை. எனவே, வழக்கத்தைவிட இருமடங்கு தேவைப்படும் உங்களுக்கு முன்னதாகவே சாப்பிடத் துவங்குவீர் காலஷியம்-ஸாண்டோஸ்.



பாப்பாவின் பற்களுக்கும் எலும்புகளுக்கும் காலஷியம் வழங்குவது பாலூட்டும் தாயன்றி வேறில்லை. அவளுக்கு வழக்கத்தைவிட மும்மடங்கு காலஷியம் தேவை.

வளரும் குழந்தைக்கு வலுவான எலும்புகளும் நலமுள்ள பற்களும் அமைய இன்றியமையாதது காலஷியம். எனவே, பெரியோரைவிட குழந்தைக்கு அதிகக் காலஷியம் தேவைப்படும்.





ஒவ்வொரு கட்டத்திலும், ஒவ்வொரு வயதிலும், மனித உடம்புக்கு அத்யாவசியம் காலஷியம். மிகச் சிறந்த வடிவிலுள்ள காலஷியம்: காலஷியம்-ஸாண்டோஸ். ராஸ்ப்பெர்ரி சுவையூட்டிய இனிமையான காலஷியம்-ஸாண்டோஸ். நாள் ஒன்றுக்கு 2 அல்லது 3 வில்லைகள் போதும். உங்கள் காலஷியம் தேவையை நிறைவுசெய்யும், வைட்டமின் C, D, B 12 சத்துக்களோடு.

**நம்பிக்கைக்குரியோர் ஸாண்டோஸ்-காலஷியம் துறையிலே உலக முன்னோடிகள்.**

SANDOZ

## காலஷியம்-ஸாண்டோஸ் வில்லைகள் தினமும் தேவை எவருக்கும்

**ப**த்திரிகை நிருபர்கள் அவனைச் சூழ்ந்து கொண்டு, 'கங்க்ராஜுலேஷன்ஸ்' என்று ஒரு குரலாகக் கோஷமிட்ட பின்னர் குறிப்புப் புத்தகங்களுடன் தயாரானார்கள்.

பாஸ்கர் ஒரு சில நிமிடங்கள் தன்னையே இழந்து போனான். இதற்கு முன் டில்லி, பம்பாய், கல்கத்தாக்களில் பத்திரிகை நிருபர்கள் அவனைச் சூழ்ந்து கொண்டு அவனுடைய டென்னிஸ் திறமையைப் பற்றி அலசி அலசிக் கேட்டிருக்கிறார்கள். இரண்டு மாதங்களில் மூன்று வெற்றிக் கோப்பை களை வீட்டின் மர அலமாரியில் (கண்ணாடி இல்லாத அலமாரி என்று அவன் எத்தனை தடவை மனம் புழுங்கியாகி விட்டது!) அடுக்கி வைத்தாகி விட்டது. அவற்றைத் தவிர சின்னஞ் சிறு கோப்பைகள் எத்தனை எத்தனையோ.



''நீங்க எத்தனை வயசிலே ஆட ஆரம்பிச் சீங்க?'' ஒரு நிருபர் கேட்டார்.

''பன்னண்டு வயசிலே.''

''உங்களுக்கு ஊக்கமும் ஆதரவும் அளித்தவர் யார்?'' — இன்னொரு நிருபர்.

''ஒரு பெரியவர்.''

''மிக்ஸட் டபிள்ஸில் நேத்து நீங்க ரேணுகாவுடன் ஆடினீர்களே, அது பற்றி ஒரு வார்த்தை!''

''ரேணுகாவைத் தவிர வேறு யார் என்னுடன் ஜோடியாக இருந்திருந்தாலும் நான் ஜெயித்திருக்க மாட்டேன்.''

''நீங்களும் அவரும் நெருங்கிப் பழகுகிறீர்கள், இல்லையா?''

''அவளுக்கு என்மீது மதிப்பும் அபிமானமும் உண்டு.''

''ஒரு பெண்கள் பத்திரிகையின் விசேஷ பேட்டியில், அவள் உங்களைக் காதலிப்பதாகச் சொல்லியிருக்கிறாளே, இது பற்றி என்ன சொல்றீங்க?''

''என்ன சொல்லணும்னு நீங்க எதிர்பார்க்கறீங்க!''

''யெஸ் ஆர் நோ?''

பாஸ்கர் விழித்தான்.

''வரப் போற விம்பிள்டனுக்கு நீங்க போக இருக்கீங்களே, ரேணுகாவும் கூட வருகிறாளா?''

''ஆமாம்!''

''ஹனிமூனையும் ஆட்டத்தையும் கம்பைன் பண்ணப் போறீங்க இல்லியா?''

''ஆமாம்'' என்றான் பாஸ்கர். சிரித்துக் கொண்டே, பிறகு ''எனக்கு ராத்திரி பிளேனைப் பிடிக்கணும்... நான் வருகிறேன்'' என்றான்.

# ஓர் அற்புத

''ஜஸ்ட் எ மினிட் பிளீஸ்!'' என்று பல நிருபர்களை முண்டியடித்துக் கொண்டு அவன் முன் நின்ற ஒருவன், ''மிஸ்டர், பாஸ்கர்!'' என்று ஆரம்பித்தான்.

அவனைப் பார்த்ததுமே பாஸ்கருடைய உடல் நடுங்கி வியர்த்தது.

''நீங்க ரேணுகாவை மணக்கப் போவது பற்றி ரொம்ப சந்தோஷம். ஆனால் பன்னிரண்டு வருஷமா ஜானு வீட்டோடு பழகி, மூணு வருஷமா ஜானுவைக் காதலிச்சிட்டு வந்தீங்களே, இப்போ அவளைக் கைவிட்டுட்டீங்களா?''

சமாளித்துக் கொண்டே, மற்ற நிருபர்கள் தன்னை மட்டமாக எடை போடக் கூடாதே என்ற எண்ணத்தில் பாஸ்கர், ''யார் சொன்னது நாங்க ரெண்டு பேரும் காதலிச்சோம்னு? ஜானுவும் நானும் ஃப்ரண்ட்ஸ்.... அவ்வளவுதான்.''

''அவ்வளவுதானா?'' என்று ஏகத்தாளமாகச் சிரித்தான், கேள்வியால் பாஸ்கரனைத் துளைத்தவன்.

இப்போது ஓரிரு நிருபர்கள் தங்கள் பத்திரிகையின் 'கலை'யான பகுதிக்காக அவனைச் சூழ்ந்து கொண்டார்கள்.

''சார்! கொஞ்சம் விவரமாகச் சொல்லுங்கள். நம்ம சாம்பியன் காதலியைத் தூக்கி எறிந்துவிட்டு, டென்னிஸ் ஆட்டக்காரி என்ற காரணத்துக்காக ரேணுகாவைக் கல்யாணம் செய்து கொள்ளப் போகிறான் .... அந்தக் காதலியைப் பற்றிக் கொஞ்சம் சொல்லுங்க!''

''ப்ளீஸ்!'' என்றான் பாஸ்கரன். அவன் பார்வையில் கெஞ்சல் பிரதிபலித்தது.

''ஒண்ணே ஒண்ணு மட்டும் சொல்றேன், உங்களுக்கு. அந்த ஜானுவின் அப்பன் இல்லேன்னா இவன் டென்னிஸ் மைதானத்தையே மனைக்கும் கூட ஒதுங்கி யிருக்க மாட்டான். இவன் முதன் முதலாக ஆடின ராக்கட்டே அவரோட ராக்கட்தான். இவன் ஒரு கிராஜுவேட். யூனிவர்ஸிடி சாம்பி




யன். ஸ்டேட் சாம்பியன். இன்னிக்கு ஆல் இண்டியா சாம்பியன் .. இதுக்கெல்லாம் யார் காரணம்? அந்த ரேணுகாவா? இல்லே, ஜானுவும் அவருடைய தகப்பனாருமா? இதை இந்தச் சாம்பியனையே கேளுங்க!''

பாஸ்கரன் தலைகுனிந்தான்.

இந்தப் பேட்டியின் விவரங்கள் நாளைக்கு பேப்பரில் வரும் போது, அதைப் படிக்கும் ரேணுகா கண்டிப்பாகத் தன் முடிவை மாற்றிக் கொள்ளுவாள். பம்பாயில் வைர வியாபாரம் செய்யும் கோடீசுவரனின் ஒரே பெண்ணை, கேவலம் ஒரு தனி ஆள் அவளிடமிருந்து பறித்து விட்டான்! இதே பேட்டியை ஜானு படிக்கும்போது என்ன நினைப்பாள்?

**வீ**ட்டுக்குச் சென்றதும் நேரே பாலுவின் அறைக்குச் சென்றான்.

''ஓ, பாஸ்கரா வா, வா.''

''நீ என்னை இப்படிக் காலை வாரி விடுவாய்னு நான் சொப்பனத்திலும் நினைக்கவில்லே. நான் உன் தம்பிங்கற பாசம் கூடவா இல்லாமப் போயிடுத்து.''

''டேய்! நீ உப்பைத் தின்னவன் வீட்டிலேயே கன்னம் வைக்கப் பார்த்துட்டே. உனக்கு ஊக்கமும் ஆதரவும் அளித்தவர் யார்னு அவங்க கேட்ட போது, நீ என்ன சொன்னே? 'ஒரு பெரியவர்'னு! ஏன்டா அவர் பெயரைச் சொல்லியிருந்தா உன் வாய் முத்து உதிர்ந்திருக்குமோ? அவர் பெயர் பத்திரிகையிலே வெளியாகி யிருந்தால் உன் தலை வெடிச்சிருக்குமோ?''

''பாலு!''

''என்னடா விறைக்கிறே! நீ பெரிய டென்னிஸ் ஆட்டக்காரன்தான். இன்னிக்கு இந்தியாவிலே ஒவ்வொரு பேப்பர்லேயும் உன் பெயர் அடிபடறது. போட்டோ வர்றது... ஒத்துக்கறேன். ஆனால் போட்டோவிலே உன் சிரிச்ச முகத்துக்கடியிலே நான் எதையடா பார்க்கிறேன்? உன் கபடத்தையும் நன்றி கெட்ட குணத்தையும்....!''

''பாலு! நீ என் அண்ணன். நீயே என்னைச் சந்தி சிரிக்க வைத்தால் எப்படியடா?''

''அப்போ ஜானு கழுத்திலே தாலியைக் கட்டு.''

''அவளுடன் வாழ்ந்தால் அது என் டென்னிஸ் வாழ்க்கையையே குலைத்து விடும், பாலு.''

''உனக்கு இந்த டென்னிஸ் வாழ்க்கையைத் தந்தவர்களே அவளும் அவளுடைய அப்பாவும்தான். அதை மறந்திட்டியா?''

''நாளைக்கு எல்லாம் பேப்பரிலே வரும்.''

''வரட்டும் ... உன் யோக்கியதை எல்லாருக்கும் தெரியட்டும். நீ என்ன தப்பு செய்தாலும் பரவாயில்லே. ஆனால் ஒரு குடும்பத்துக்கு இப்போ துரோகம் செய்றியே அது பெரிய பாவம்டா!''

''ரேணுகாவாலே என்னை மறக்க முடியாதுடா!''

''அவ மறந்தாக்கூட, நீ அவள் பின்னாலே நாய் மாதிரி ஓடுவே.... போடா ... போ ... போ...''

''இன்னிக்கு நான் பம்பாய்க்குப் போறேன், பாலு. பரோடாவிலே டூர்ணமென்ட். அடுத்த வாரம் வரேன்....''

''ரேணுகாதான் மனைவி என்கிற முடிவை மாத்தலே, நீ இந்த வீட்டுப் படியை மிதிக்காதே. போ!''

டாக்டர் நவநீதம் சாய்வு நாற்காலியில் அமர்ந்து அன்றைய காலைப் பத்திரிகைகளை ஒவ்வொன்றாகப் படித்து முடித்தார். அவர் கண்முன் ஒரு பன்னிரண்டு வயதுப் பையன் கிழிந்த நிஜாரும் அழுக்கேறிய சொக்காயுமாக நின்றான். அவனுடைய அன்றைய கேவல் இப்போது அவர் காதுகளில் ஒலித்தது.

''மாமா! எனக்கும் டென்னிஸ் ஆடணும்னு ஆசையா இருக்கு மாமா!''

தம் பங்களாவின் பின்புறத்தில் ஒடுவேய்ந்த வீட்டில் குடியிருக்கும் பாலம்மாவின் இரண்டாவது பிள்ளையை என்றுமே அவருக்குப் பிடிக்கும். தமக்குப் பிறந்த பிள்ளை உயிரோடு இருந்திருந்தால் அவன் இவனைப் போலத்தானே இருப்பான். ஒரு சமையற்காரியின் பிள்ளை ஓர் எட்டாத இடத்துக்குத் தாவுவதாக அவருக்குப்படவில்லை.

''இந்த ஆட்டத்திலே ஆசை மட்டும் போதாது, பாஸ்கரா!'' என்றார்.

''மாமா! தெனம் தெனம் நான் உங்க ஆட்டத்தைப் பாக்கறேன். உங்க மாதிரியே நன்றாக ஆடணும்னு ஆசைப்படறேன். நீங்க பெரிய சாம்பியன்னு அம்மா சொன்னா!''

டாக்டர் கண்களை மூடிக் கொண்டார். பதினாறு வயது பாஸ்கர் தூய வெள்ளை நிற அரை நிஜாரும் டென்னிஸ் பனியனுமாக லயோலா கல்லூரி கோர்ட்டில் நிற்கிறான். ''லவ் ஆல்! 15-லவ், 30-லவ், 40-லவ் கேம்'' என்று அடுத்து அடுத்துக் கேட்கிறது! டாக்டர் தாம் மூன்று வருடங்களில் தயார் செய்த சிஷ்யனைப் பார்த்துப் பரவசப்படுகிறார். சென்னை நகரக் கல்லூரிப் போட்டியில் பாஸ்கர் வெற்றிக் கோப்பையுடன் அவர் முன் நிற்கிறான். கீழே விழுந்து அவரிடம் ஆசி பெறுகிறான்.

நவநீதத்தின் கைப் பேப்பர் கீழே விழுகிறது. அடுத்த மூன்று ஆண்டுகள் மின்னல் வேகத்தில் கண் முன் ஓடுகின்றன. யூனிவர்ஸிட்டி சாம்பியன், ஜூனியர் சாம்பியன் என்றெல்லாம் கோப்பைகளை அவர் காலடியில் வைத்து வணங்குகிறான்.

உலகத்தில் அவனிடம் தோல்வி அடையாத பெரிய வீரர்களே இருக்க மாட்டார்கள். இந்தப் பாஸ்கர் பெரிய டென்னிஸ் ஆட்டக்காரனாக வர வேண்டும்... பணத்துக்காகச் சொகுசான வாழ்வுக்காக டென்னிஸ் ஆடக்கூடாது. என் பாஸ்கர் அப்படியே இருக்கப் போகிறான் .....

திடீரென்று ''அப்பா!'' என்ற குரல் கேட்கவே நவநீதம் திடுக்கிட்டு விழித்தார்.

''என்னப்பா பலத்த யோசனை? இந்தாங்க காப்பி!'' என்றாள் ஜானு.

''பேப்பரைப் பார்த்தியா ஜானு?''

''பார்த்தேம்ப்பா!''

''நான் வளர்த்த பிள்ளை அம்மா....''

''இல்லேப்பா. நீங்க ஒரு பிள்ளையை வளர்க்கலே. அவனோடு டென்னிஸைத் தான் வளர்த்தீங்க....''

''டென்னிஸே என் பிள்ளைதானே ஜானு!''

''அப்போ வேறு பிள்ளையை வளருங்க அப்பா.''

''ஏம்மா, அவனைப் பிரகாசமாக்கின நான் உன்னை இருட்டிலே உட்கார்த்திட்டேனே?''

''என்னப்பா உளர்றீங்க....?''

''பேப்பரிலே என்ன போட்டிருக்கு பாத்தியா?''

''ரேணுகாவைப் பத்தித் தானே! பார்த்தேன். இதைப் படிச்சா, பாவம் பாஸ்கர் நொந்து போவார்!''

''என்னம்மா சொல்லறே!''

''நீங்க பாஸ்கர் கொடுத்த பேட்டியைப் பத்திப் பேசறீங்களா?''

''ஆமாம்.''

''நான் முந்தாநாள் ராத்திரி பாம்பே ஏர்போர்ட்டிலே ரேணுகா இறங்கியதும் கொடுத்த பேட்டியைப் பத்திப் பேசறேன். அந்தப் பேப்பரிலே எட்டாம் பக்கத்திலே, மூணாவது பத்தியிலே கீழே பாருங்க....''

நவநீதம் பார்த்தார்.

''என்னம்மா இது? போன மாசம் ஒரு பெண்கள் பத்திரிகையில் கொடுத்த விசேஷப் பேட்டியில் வேறு என்னமோ சொல்லியிருந்தாளே!''

''பாஸ்கரைக் கல்யாணம் பண்ணிக்கப் போவதாகச் சொல்லியிருந்தாள், அப்பா. ஆனால் இப்போ அவள் மனசு மாறிடுத்து... தம்முடைய ஒரே பொண்ணு நாட்டோடே, வீட்டோடே இருக்கிறதைத் தான் அவளுடைய அப்பா விரும்புகிறாராம். சென்னையில் பாஸ்கருடன் சேர்ந்து ஆடின ஆட்டம்தான் அவளுடைய கடைசி ஆட்டமாம்! அப்பா பார்த்து வைத்திருக்கிற என்ஜினியரைத்

---

கால் பந்து விளையாடும்போது முக்கியமாக அநுசரிக்க வேண்டிய விதி என்ன?

பந்து கிடைத்தால் பந்தை உதை. ஆள் கிடைத்தால் ஆளை உதை.

-- கேவி




வாரீர் —
புதுமை
தவழ்ந்திட
எலுமிச்சைப்
புத்துணர்வுப்
பரவசத்தோடு
லிரில் புத்துணர்வு.
பார்த்தறியாப் புதுமை,
பரவசக் கிளுகிளுப்பு.
லிரில்.
அலையெறியும் தளதள
பச்சை. அதன் நயமோ
குளுகுளு எலுமிச்சை.
பொங்கிப் பீறிடும்
நுரைவளம்,
Liril
THE FRESHNESS SOAP
Liril
லிரில்
புத்துணர்வு சோப்
கிளுகிளு புத்துணர்வில் குளித்தெழ
இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்புக்கள்.
லின்டாஸ்–LR-20-140 TM



கேரம்போர்டு விளையாட்டைச் சிலர் காரம் போர்டு என்கிறார்களே, ஏன்?

அவர்கள் போரிக் பவுடருக்குப் பதில் மிளகாய்ப் பொடி உபயோகிக்கிறார்களோ என்னவோ!  -- சாரு

---

தான் விவாகம் செய்து கொள்ளப் போகிறாளாம்.''

''அப்பாடா! நான் பிழைச்சேன்!''

''ஏம்ப்பா....''

''இனிமே பாஸ்கர் நம்ம வீட்டு மாப்பிள்ளைதான்....''

''இல்லேப்பா!''

''ஜானு என்ன சொல்லறே?''

''பாஸ்கரோடு டென்னிஸை நீங்க வளர்த்த போது நான் அவனுடன் பழக ஆரம்பிச்சேன். அவன் சொல்ற மாதிரி நாங்க ரெண்டு பேரும் வெறும் ஃப்ரண்ட்ஸ்தாம்பா.....''

''சாம்பியனு ஒரு பிள்ளைதான் பொறக்கலே .... மாப்பிள்ளையாவது இருக்கக் கூடாதா?''

''வயசு ஆக ஆக ஒரு பெண்ணுக்குக் கணவனுடைய டென்னிஸ் முக்கியமா? இல்லே வாழ்க்கை முக்கியமாப்பா?''

''ஐயோ, இத்தனை நாளா நீ பாஸ்கரனைத் தான் விரும்பறேன்னு நினைச்சேனே... அடிக்கடி அவன் வீட்டுக்குப் போய் மணிக்கணக்கா உட்கார்ந்திருப்பியே....''

''அவன் கிட்டே சின்ன வயசு சிநேகிதத்தை ஒரு ஆதாரமா வைச்சுக்கிட்டுப் பேசிண்டிருந்தேன். அங்கே நாங்க பேசிக் கொண்டிருக்கிறப்போ, ஒரு மூலையிலே கீழே உட்கார்ந்து, சுவரிலே சாய்ந்தவனாய், அமைதியாக ஒருவன் புத்தகங்களில் மூழ்கியிருப்பான் அப்பா... அவனோட அமைதியான, சலனமில்லாத முகத்தைப் பார்க்கவே நான் அடிக்கடி அங்கே போவேன். ஆனால் அவன் என்னை இதுவரையில் புரிந்துகொள்ளவில்லை அப்பா. கதையிலே வந்த பாத்திரங்களோட உள் மனசுகளைப் புரிந்து கொள்கிற அவன் என் மனசைப் புரிந்து கொள்ள முயலக்கூட இல்லை.''

''யாரைச் சொல்றேஜானு? பாலுவையா?''

''ஆமாம்ப்பா...''

பரோடா தோல்வியை இமாலயத் தோல்வியாகக் கருதிய பாஸ்கர் ஒடிந்து போனவனாக வீடு திரும்பினான். அவனுக்குத் தன் தோல்வியின் காரணம் தெரிந்தும் ஜீரணிக்க முடியவில்லை. வீட்டில் பாலு இல்லை. குளித்து, உடைமாற்றிக் கொண்ட அவன் நேரே டாக்டர் வீட்டினுள் பிரவேசித்தான்.

''நமஸ்காரம் மாமா!''

''ஓ, பாஸ்கரா..., உட்கார்.''

''பரோடாவிலே தோத்து விட்டேன், மாமா!''

''ஒரு வருஷமா ஜெயிச்ச போது என் கிட்டே சொல்ல வராத நீ இப்போ தோத்த கதையைச் சொல்ல வந்திருக்கிறாயா?''

''என்னைத் தப்பா எடுத்துக்காதீங்க!''

''இத்தனை நாளா தப்பா எடுத்துண்டிருந்தேன், பாஸ்கர்... ஆனா ஜானு என்னை கரெக்ட் பண்ணிட்டா!''

''நான் பேட்டியிலே என்னென்னவோ உளறி விட்டேன். எல்லாத்துக்கும் காரணம் என் கூடப் பிறந்த அண்ணன் பாலுதான்!''

''அவன் உன்னை உளற வைத்தானா? ஏன்?''

''ஜானுவின் பெயரைப் பேட்டியின் போது இழுத்ததே அவன்தான், மாமா. வீட்டுக்கு வந்ததும் என்னைக் கழுத்தை தப்பிடித்து விரட்டாத தோஷமா கத்தினான்.''

''ஏன்?''

''நான் நன்றி கெட்டவனாம்... எந்த வீட்டு உப்பைத் தின்றேனோ அந்த வீட்டுக்கே துரோகம் செய்யறேனாம். நான் ஜானுவைக் கல்யாணம் செய்து கொள்ளச் சம்மதிக்காவிட்டால் வீட்டு வாசல்படியே மிதிக்கக் கூடாதாம்!''

''இப்போ யார் வீட்டு வாசல்படியை மிதிக்கப் போறே, பாஸ்கர்.''

''மாமா! நான் நன்றி மறக்கலே. இன்னிக்கு டென்னிஸ் ஆட்டத்திலே நான் கொடி கட்டிப் பறக்கறதுக்கெல்லாம் காரணம் நீங்கதான். ஜானுவோட ஊக்கம்தான். பரோடாவிலே நான் தோற்றதற்கு என் மனசிலே புகுந்த பேய்தான் காரணம். பேராசைக்காரப் பேயை நான் விரட்டிட்டுப் புடம் போட்டவனா இப்போ வந்து நிக்கறேன்!''

''அடுத்த டூர்னமெண்ட்லே நீ ஜயிக்கணும். அப்பத்தான் எனக்குப் பெருமை!''

''அப்படியே மாமா.''

''டென்னிஸ் ஒரு வாய்ப்புத்தான். அந்த வாய்ப்பிலே உன் புகழ் அதிகமாகிறது... ஆனால் புகழை ஆதாரமா வைச்சு, மத்த வாய்ப்புக்களுக்காக அலையறது டென்னிஸையே அவமதிக்கிறதாகும். டென்னிஸை இனிமேலாவது உன் சுய நலத்துக்காகக் கேவலப்படுத்தாதே....''

''சரி, மாமா....''

அவன் சொல்லி முடிப்பதற்கும் பாலுவும் ஜானுவும் கைநிறைய ஜவுளி காகிதப் பைகளுடன் வருவதற்கும் சரியாக இருந்தது.

''ஹாய், பாஸ்கர்!''

''ஹலோ ஜானு... பாலு நீயா?'' சொன்ன பாஸ்கர் இருவரையும் மாறி மாறிப் பார்த்து விட்டு, டாக்டர் நவநீதத்தைப் பார்த்து விழித்தான்.

''நீ பரோடாவிலே மாட்ச் ஆடிண்டிருக்கறப்போ நான் இங்கே ஒரு மாட்சைத் தயார் பண்ணிட்டேன் பாஸ்கர். மிக்ஸட் டபிள்ஸ். வாழ்க்கையிலே கடைசி வரையில் ஒரு பெண்ணும் பிள்ளையும் சேர்ந்து ஆட வேண்டிய ஓர் அற்புதமான ஆட்டம்'' என்றார் நவநீதம்.

''ஐ விஷ் யு போத் எ வெரி ஹாபி மாரிட் லைஃப்!'' என்றான் பாஸ்கர். வார்த்தைகள், களிமண் தரையில் விழும் பந்து எம்பாமல், உருண்டு தடுமாறி ஓடுவது போல், ஒரு கேவலாக வந்தன.

# சுட்டிப்பயல்

ரா. வீழிநாதன்

"வேண்டாமடா, இந்த விளையாட்டு!"

பொக்கை வாய்ப் பிச்சுத் தாத்தாவுக்குத் தம் பிள்ளைப் பருவம் ஏனோ நினைவு வரவில்லை. திண்ணையில் உட்கார்ந்து உரலில் பாக்கையும் வெற்றிலையையும் போட்டுப் பொடித்துக் கொண்டே உபதேசம் செய்தார்.

"போ, தாத்தா!" என்று கூறிய அகோரம், தான் விளையாட்டுப் பிள்ளைதான் என்பதைச் செய்கையால் காட்டினான்.

சிறு குழியில் வைத்திருந்த புள்ளை அவன் தன் கைக் கிட்டியால் தெம்பிவிடவே, அது விர்ரென்று பறந்தது; கண் காணாத இடத்துக்குப் போய் விழுந்தது. அவனுடைய விளையாட்டுத் தோழர்கள் அதைத் தேடி எடுத்து வருவதற்குள் 'உன் பாடு, என் பாடு' ஆகிவிட்டது!

"டேய், டேய்! யார் மேலாவது பட்டு விடுமடா; விளையாட்டு வினையாகிப் போய் விடுமடா!" தாத்தாவின் வாய்மொழியாக அநுபவம் பேசியது.

இளங்கன்று பயம் அறியுமா? விளையாட்டுப் பிள்ளை வினை அறிவானா? அவனுக்கு அவன் விளையாட்டில்தானே கவனம் இருக்கும்? எனவே, அவன் தாத்தாவின் எச்சரிக்கையைக் காதில் வாங்கிக் கொள்ளவில்லை.

அகோரம் அற்புதமான விளையாட்டுப் பிள்ளை. பிள்ளையார் பந்து, கிட்டிப் பந்து, எறிபந்து, கிட்டிப் புள் எதிலுமே அவனை வெற்றி கண்ட விளையாட்டுப் பிள்ளைகள் அவ்வூரில் இல்லை.

அகோரம் ஆண் பிள்ளைகள் விளையாடும் விளையாட்டில் அசகாய சூரன் என்றால், அடுத்த வீட்டு அம்மாளுக் குட்டி பெண் குழந்தைகள் விளையாடும் விளையாட்டுக்களில் அவனுக்கு ஒரு படிமேல் இருந்தாள். பல்லாங்குழி, பாண்டி, தாயக் கட்டம், ஆடு–புலிக் கட்டம் ஆகியவற்றில் அவளை வெற்றி கண்ட பெரியவர்கள்கூடக் கிடையாது.

இத்தனைக்கும் அவளுக்கு வயது ஆறு; அகோரத்துக்கு எட்டு வயது. 'இது ஆண்கள் விளையாடும் விளையாட்டு' 'இது பெண்கள் விளையாடும் விளையாட்டு' என்று பாகுபடுத்தி விளையாடக்கூடிய வயதல்லவே? அவள் சில சமயம் அகோரத்தோடு கிட்டிப்புள் ஆடுவாள். அகோரம் அவளோடு பல்லாங்குழி – பாண்டிகூட ஆடுவான்.

"டேய்! இந்தப் பல்லாங்குழி என்ன தெரியுமா? கணக்கு! கணக்கை விளையாட்டாகவே சொல்லித் தருகிற வழி என்று என் அம்மா கூறியிருக்கிறாள்!" என்பாள் அம்மாளுக் குட்டி.

"போடி, போ! நீ கணக்குப் போடுகிற லட்சணம்தான் ஊர் முழுக்கத் தெரிந்திருக்கிறதே! ஒன்றும் ஒன்றும் மூன்று என்று சொல்லும் உனக்குப் பல்லாங்குழி கணக்குத் தெரியுமாக்கும்! சும்மா 'புருடா' விடாதே!" என்பான் அகோரம்.

"வேண்டுமானால் பாரேன்! நீயும் நானும் முக்காலே மூணுவாட்டி பல்லாங்குழி ஆடுவோம். நீ ஜயிச்சால், காகிதத்தைக் கப்பல் கிழித்து என் காதில் மாட்டி என்னைக் கழுதை என்று அழை; நான் ஜயிச்சால் உன்னைக் கழுதை என்பேன். உனக்குச் சம்மதமா, சொல்!" என்று சூளுரைத்தாள் அம்மாளு.

சான் பிள்ளை ஆனாலும், அகோரம் ஆண் பிள்ளை அல்லவா? அவளுக்குச் சளைத்தவனாகக் காட்டிக் கொள்ளுவானா? "பார்ப்போமா?" என்று கேட்டான்.

"பார்ப்போமே!" என்றாள் அம்மாளு.

ஆட்டம் தொடங்கியது. சொன்னால் சொன்னபடி மூன்று முறையும் அகோரத்தைப் பல்லாங்குழி ஆட்டத்தில் 'போண்டி' யாக்கிக் காட்டினாள் அம்மாளு. ஆனால் பெண்களுக்கே இயல்பான அடக்கம், அந்தச் சிறு வயதிலும் அவளை அவன் காதில் கப்பல் செய்து மாட்டிக் கழுதை என்று கூற விடவில்லை. "இப்பொழுதாவது தெரிந்துகொள்ளடா! பல்லாங்குழிக்குப் பதினான்கு குழி உண்டு. அதிலே நடுக் குழி இரண்டும் 'காசி'க் குழி. ஒவ்வொரு குழிக்கும் பன்னிரண்டு காய் போடுகிறோமே! எந்தக் குழியைக் கலைத்து ஆடினால் 'கலவானை' அப்படியே தட்டிக் கொண்டு போகலாம், 'காசி'யைப் பொத்தலாம் என்பதற்கெல்லாம் ஒரு கணக்கு உண்டு. 'பசு' எடுத்துக் கொள்ளுகிறோமே, ஆறு ஆறாக! அதுவுமே கணக்குத்தானே? கூட்டல் கழித்தல் வாய்ப்பாடுகளையெல்லாம் இந்த விளையாட்டு வேடிக்கையாகவே சொல்லித்



தருகிறது !'' என்று வாத்தியார் தொழிலை மேற்கொண்டு விட்டாள்.

''உக்கும்!'' என்று மோவாயைத் தோளில் இடித்துக் கொண்டு போய் விட்டான் அகோரம்.

ஆனாலும் குழந்தை வாய் தன் வெற்றியைப் பற்றிப் பெருமை பேசிக் கொள்ளாமல் இருக்குமா ? எதிர் வீட்டு ஏகாம்பரத்தின் காதுகளில் இது விழுந்தது. அவனுக்கு வயது, அம்மாளுவின் வயதையும் அகோரத்தின் வயதையும் கூட்டினால் என்ன கூட்டுத் தொகை வருமோ, அந்த வயது. ஆனால் படிப்பது. . . .? அம்மாளுவுக்கும் அகோரத்துக்கும் இடையே உள்ள இரண்டாம் வகுப்பு! அத்தனை புத்திசாலி! வெறும் வாயை மெல்லுவதிலேயே வல்லவன். அவல் கிடைத்து விட்டால் கேட்க வேண்டுமா ? அம்மாளுவின் வெற்றியைப் பெரிதுபடுத்தியதோடு நில்லாமல் அகோரத்தின் தோல்வியை மலையத்தனை உயர்த்திவிட்டான். பெண் பிள்ளையிடம் தோற்றான் என்று பெயர் சூட்டி அவன் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொண்டான். அகோரத்துக்கு அவன் மேல் ஆத்திரம் வரவில்லை. அவன் உடல் வலு மிக்கவனாயிற்றே ! அவனிடம் போய் வாலை ஆட்டினால் இரண்டு அறை கொடுத்து ஓட்ட நறுக்கி விடமாட்டானா ? 'இத்தனூண்டு' இருந்து கொண்டு இந்த அம்மாளுதான் தன் வெற்றியை ஊர் முழுதும் தம்பட்டம் அடித்திருக்கிறாள் என்று தீர்மானித்துவிட்டான். அவள் மீது வந்த ஆத்திரத்தை அவளோடு 'டூ' விட்டுக் காட்டி விட்டான்.

அன்று அகோரம் கீழத் தெருவில் கிட்டிப் புள் அடித்துக் கொண்டிருந்தான். மேலத் தெருவில் அம்மாளு தன் தோழிகளுடன் பாண்டி ஆடிக் கொண்டிருந்தாள். பாண்டிக்கு முதுகுப்புறம் காட்டிக் கொண்டு, கண்களை மூடிக் கொண்டு தலைக்கு மேலாக ஓட்டுச் சில்லை வீசினாள். அது அவள் நினைத்த கட்டத்தில் கோட்டில் படாமல் விழுந்தது. திரும்பிப் பார்த்துவிட்டுக் கண்களை மூடிக் கொண்டு, 'ரைட்டா, ரைட்டா ?' என்று கேட்டவாறே கட்டம் கட்டமாகக் கோட்டில் கால்படாமல் தாண்டி வந்து, தான் போட்டிருந்த சில்லை மிதித்து விட்டாள்.

தோற்றாலும் சிரிப்பு, வெற்றி பெற்றாலும் சிரிப்பு ! இதுதானே குழந்தைகளின் இயல்பு! சிறுமிகள் அவளுடைய வெற்றியைக் கொண்டாடக் கைதட்டி ஆரவாரம் செய்தனர். அவள் கண்களைத் திறந்து சில்லைப் பார்த்து விட்டு நிமிர்ந்தாள். இதற்குள் யார் கண்பட்டதோ, தெரியவில்லை, கிட்டிப்புள் ஒன்று வந்து அவள் நெற்றிப் பொட்டைத் தாக்கியது. இரத்தம் பீறிட்டுக் கொண்டு வர, அவள் அப்படியே மயங்கிச் சாய்ந்தாள். கூடியிருந்த சிறுமிகள் கதறிவிட்டனர். ஊரே கூடிவிட்டது.

இதற்குள் கொம்மாளமும் கோலாகலமுமாக இருந்த கீழத் தெரு வெறிச்சோடிவிட்டது. அத்தனை சிறுவர்களும் சிட்டாகப் பறந்துவிட்டனர். இருந்தாலும் பெரியவர்கள் விடுவார்களா ? ஓடிப் போய் அத்தனை பையன்களையும் பிடித்துக் கொண்டு வந்தார்கள். 'நான் இல்லை, நான் இல்லை' என்று குழந்தைகளிடமிருந்து ஏகோபித்த குரல் எழுந்தது.

''எல்லோருமே 'நான் இல்லை, நான் இல்லை' என்று சொன்னால் எப்படி ? உங்களில் ஒருவன்தானே அடித்திருக்க வேண்டும்? உண்மையைச் சொல்லாவிட்டால் எல்லோருக்குமே உதை விழும் !'' என்று பெரியவர்கள் அதட்டினார்கள். அடிக்குப் பயந்து முதலில் உளறியவன் ஏகாம்பரம்தான்.

''அகோரம்தான் அடித்தான். அவனுக்கும் அம்மாளுவுக்கும் சண்டை. அவளிடம் அவன் பல்லாங்குழியில் தோற்றுவிட்டான். அந்த ஆத்திரத்தில் அவளோடு பேசவில்லை. இன்று சமயம் பார்த்துத் தன் ஆத்திரத்தைத் தீர்த்துக் கொண்டு விட்டான்!'' என்று காது மூக்கு வைத்து, கடுகு மிளகு கலந்து கூறினான்.

அகோரம் மறுக்கவில்லை. தான் அடித்த கிட்டிப்புள் தான் அம்மாளுவைத் தாக்கியிருக்க வேண்டும் என்பதை ஒப்புக் கொண்டான். ஆனால், தான் வேண்டுமென்றே அவளை





### கிரிக்கெட்டிலும் நம்பிக்கைகள்...

**கிரிக்கெட் ஆடுபவர்களுக்கும் சில சம்பிரதாயமான நம்பிக்கைகள் உண்டு. மறுநாள் விளையாட்டு தொடங்க இருக்கும்போது 'பாட்ஸ்மேன்' யாரும் முதல் நாள் இரவு விருந்தில் வாத்து (Duck) மாமிசம் சாப்பிட மாட்டார்கள். மறுநாள் ஆட்டத்தில் பூஜ்யம் (Duck) கிடைக்கும் என்ற பயமாம்!**

— ஜெயஸ்ரீ விசுவநாத்

---

அடிக்கவில்லை, தவறிப் பட்டு விட்டது என்று கூறினான். ''இந்த விளையாட்டு வேண்டாம், வேண்டாம் என்று முட்டிக் கொண்டேனே, கேட்டாயா? இப்பொழுது விளையாட்டு, வினையாகி விட்டது, பார்!'' என்று பொக்கைத் தாத்தா கடிந்து கொண்டது உண்மையாக முகிழ்ப்பதைக் காண அவன் பிஞ்சு மனத்தை என்னவோ செய்தது!

ஆம், விளையாட்டு வினையாகித்தான் விட்டது. அடுத்த வீட்டுக்காரர்களுக்கும் அகோரத்தின் வீட்டுக்காரர்களுக்கும் பேச்சு வார்த்தையே இல்லாமற் போய்விட்டது. அம்மாளுவின் நெற்றிப் பொட்டில் பட்ட காயம் ஆறிவிட்டாலும், அதனால் தோன்றிய வடு நிலையாக நின்று நினைவுச் சின்னம் போலாகிவிடவே, அந்தக் குடும்பத்தார்களின் மனத்தாங்கல் சட்டென்று மறையவில்லை.

இதற்குள் காலமும் மனித விளையாட்டில் பங்கு கொண்டு இரு குடும்பங்களையும் வேற்றூருக்குக் குடிபெயர வைத்துவிட்டது.

அன்றைய எட்டு வயது கிட்டிப்புள் வீரன் இன்றைக்கு இருபத்தாறு வயது நிறைந்த கால்பந்தாட்டக் காளை. ஏ. ஜி. ரம் என்ற பெயரில் ஊர்ப் புகழைத் தாண்டி உலகப் புகழ் பெற்று விட்டான். அவனுக்குத் திருமணம் செய்து பார்க்க ஆசைப்பட்டனர் அவனைப் பெற்றவர்கள். அவர்களோடு மூன்று முறை பெண் பார்க்கப் போனவன் சொஜ்ஜி–பஜ்ஜியைச் சுவைத்தானே ஒழியப் பெண்ணைத் தேர்ந்தெடுப்பதில் தோல்வியையே தழுவினான். ஆம், அவன் பார்த்த அந்த மூன்று பெண்களும் அவன் மனத்துக்குகந்தவர்களாகப்படவில்லை. ''இப்படியெல்லாம் 'நொட்டு, நொசுக்கு'ப் பார்த்தால், பிள்ளையாருக்குக் கல்யாணம் ஆன பிறகுதான் உனக்குக் கல்யாணம் ஆகும்' என்று அவன் அம்மாவே அலுத்துக் கொண்டாள்.

''அவசரப்படாதே, அம்மா! பொறுத்தார் பூமியாள்வார்!'' என்று அம்மாவுக்கு ஆறுதல் கூறிவிட்டு 'விர்'ரென்று 'கிளப்'புக்குச் சென்றான். அங்கே மும்முரமாகச் 'செல்' ஆட்டம் நடந்து கொண்டிருந்தது. ஒரு பெண் ஆடிக் கொண்டிருந்தாள். அத்தனை பேரும் அவள் ஆடும் முறையைக் கண்டு அயர்ந்துபோயினர். அவனுமே அயர்ந்து போனான். அவள் ஆடும் விதத்தில் தான் எத்தனை லாகவம்! அரசனைக் கட்டியவள், அதே வேகத்தில் அகோரத்தைப் பார்வையால் ஒரு வெட்டு வெட்டினாள். அவளைப் பார்த்தவனுக்குப் பொறி தட்டினாற் போல் இருந்தது. 'இந்தப் பெண்ணை நாம் எங்கே, எப்பொழுது பார்த்திருக்கிறோம்?' என்று யோசனை செய்தான். யோசனையில் அவன் மூளை சுழன்றதே ஒழிய, நினைவு வரவேயில்லை.

எனவே, அவளைத் தொடர்ந்து அவளைப் பற்றி அறிய முடிவு செய்தான். வைத்த குறி தப்பாது வெற்றி கண்டவன், தன் அம்மாவிடம் சென்று அவள் விலாசத்தைக் கூறிப் பெண் கேட்கப் போய் வருமாறு வற்புறுத்தினான்.

''இதென்னடா, ஊரில் இல்லாத பழக்கம்? பிள்ளை வீட்டார் வலியப் போய்ப் பெண் கேட்பதா? எத்தனையோ பெண் வீட்டார் நம் வீட்டு வாசலில் தவம் கிடக்க, நாம் மரியாதையைக் குறைத்துக் கொண்டு பெண் வீட்டாரைத் தேடிப் போகிற புதிய சம்பிரதாயத்தை நான் ஏற்க முடியாது!'' என்றாள் அவள்.

''இது புது சம்பிரதாயம் இல்லை, அம்மா! பழைய சம்பிரதாயம் திரும்பி வருகிறது. அந்தப் பெண் கொள்ளை அழகு, அம்மா! நெற்றிப் பொட்டில் ஏற்பட்டிருக்கிற வடு இயல்பாகவே திருஷ்டி கழிக்கிறாற் போலிருக்கிறது. அதோடு அந்தப் பெண்ணை எங்கோ எப்பொழுதோ பார்த்திருப்பதாகவும் தோன்றுகிறது. ஒருவேளை முற்பிறவியில்...''

''நம் அம்மாளுக்குட்டியாக இருக்குமோ?'' அம்மா அடி எடுத்துக் கொடுக்கவே, ''கரெக்ட், அம்மா! அவளே அச்சுத்தான். ஆனால் பெயர்தான் மல்லிகா!'' என்றான்.

''அவளுக்குச் செல்லப் பெயர்தான் அம்மாளுக்குட்டியே ஒழிய உண்மைப் பெயர் மல்லிகாதான்!'' — அம்மா சொல்லி முடிப்பதற்குள், சுகிசேரில் அமர்ந்து உரலுக்கும் உலக்கைக்கும் வேலை கொடுத்துக் கொண்டிருந்த பொக்கை வாய்ப் பொக்கைத் தாத்தா, ''டேய் பயலே! 'வேண்டாம்டா இந்த விளையாட்டு! வினையாக முடியும்!' என்று சொன்னேனே, கேட்டாயா? இப்பொழுது அந்தத் தாயக் கட்டம் உன்னைப் பாண்டியாடிவிட்டது, பார்! நீ என்னதான் கால் பந்தாட்ட வீரனானாலும் இனி அவள் கைப்பந்துதான். விளையாட்டுக்குச் சொல்லவில்லை; வினையாகவே சொல்லுகிறேன். இந்த வீட்டிலே குழந்தைகள் விளையாடி ரொம்ப வருஷம் ஆகிவிட்டது. அம்மாளுவைக் கல்யாணம் செய்து கொண்ட அடுத்த வருஷமே நீ என்னோடே விளையாட எனக்கு ஒரு கொள்ளுப் பேரனைத் தர வேண்டும்!'' என்று கூறித் தம் பொக்கை வாய்ச் சிரிப்பை உதிர்த்தார்.

''போங்க தாத்தா!'' ''எப்பொழுதுமே உங்களுக்கு விளையாட்டுத்தான்!'' என்றான் ஏ. ஜி. ரம் என்ற அகோரம்.

---

Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600 031.
Managing Editor: T. Sadasivam. Associate Editor: K. Rajendran.

# மலரும் பூவெனப் பிள்ளை வளர்ந்திடப் பலமான துணை—

# இன்க்ரிமின்*




இளமைப் பருவம்—பூவாய் மலரும் நாட்கள்—மலர்ந்து சிரித்து உங்கள் மனத்தை அள்ளி வளரும் பருவம்—இப்பருவத்தில் அவளுக்குக் கட்டாயம் தேவை—இன்க்ரிமின். பின்னர் பாருங்களேன் அவள் வளர்ச்சியை! பசித்துப் புசிப்பாள்—உண்ணும் உணவெல்லாம் ஓங்கிய வளர்ச்சியாக மாறும். நலம் தரும் வைட்டமின்கள், இரும்புச் சத்து இவற்றோடு உங்கள் மகளின் வளர்ச்சிக்கு மிகமிக அத்தியாவசியமான அமினோ அமிலம், லைஸின் யாவும் நிறைந்தது இன்க்ரிமின.

# இன்க்ரிமின்* டானிக்

டிராப்ஸ்—2 மாதங்கள் முதல் 2 வயது வரையில்
ஸிரப்— 14 வயது வரையில்

## உணவையெல்லாம் ஓங்கிய வளர்ச்சியாக்கும்
## உங்கள் பிள்ளை பூவாய் மலர்ந்து சிரிக்கும்!

டாக்டர்கள் நம்பிக்கைக்குப் பாத்திரமான பெயர்— Lederle சையனமிட் இந்தியா லிமிடெடின் ஒரு பிரிவு

*அமெரிக்கன் சையனமிட் கம்பெனியின் ரெஜிஸ்டர்டு டிரேடு மார்க்

Sista's-INC-363 C-R/76 Tam